உ

சிவமயம்

# திருவேகம்பரந்தாதி

(பதவுரையுடன்)



திருவாவடுதுறை ஆதீனம்

உ
சிவமயம்

# திருவேகம்பரந்தாதி

( பதவுரையுடன் )

திருக்கயிலாய பரம்பரைத்
திருவாவடுதுறை ஆதீனத்துத்
திராவிடமாபாடியகர்த்தராகிய

## ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்

**குருபூஜை [சித்திரை - ஆயில்யம்] விழாமலர்**

**திருவள்ளுவர் ஆண்டு 2049,**
**மெய்கண்டார் ஆண்டு 795**
**விளம்பி ஆண்டு, சித்திரை திங்கள் 11ஆம் நாள்,**
**24.04.2018**
**செவ்வாய்க் கிழமை**

உ

சிவமயம்

ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் அருளிய

# திருவேகம்பரந்தாதி

( பதவுரையுடன் )

இது

திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்து நான்காவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக**

**பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம் வெளியிடப்பெறுகிறது.

**திருவாவடுதுறை ஆதீனம்**

# பொருளடக்கம்

உ

சிவமயம்



ஆதீனக் குருமுதல்வர்

**ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள்**

உ
சிவமயம்

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணை
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

– காஞ்சிப்புராணம்.
[ மாதவச் சிவஞான யோகிகள் ]



திருவாவடுதுறை ஆதீனம்

24ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

# பதிப்புரை

“மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்
பிறையானைப் பெண்ணொடாண் ஆகிய பெம்மானை
இறையானை ஏர்கொள் கச்சித்திருவேகம்பத்(து)
உறைவானை அல்லது உள்காது எனது உள்ளமே.”

-திருஞானசம்பந்தர் தேவாரம்.
இரண்டாம் திருமுறை

மாதவச் சிவஞான சுவாமிகள் சைவத் தமிழுலகிற்கு வழங்கி அருளியுள்ள அருஞ்சிறப்பு வாய்ந்த நூல்களுள் சிற்றிலக்கியங்களும் உள்ளன. இந்தச் சிற்றிலக்கியங்களுள் அந்தாதி நூல்கள் ஐந்து. இவற்றுள் பதிற்றுப்பத்து அந்தாதி நூல்கள் மூன்று. இளசை, கலைசை, குளத்தூர் ஆகிய தலங்களின் மீது அந்தப் பதிற்றுப்பத்து அந்தாதிகள் பாடப் பெற்றுள்ளன. ஏனைய இரண்டு அந்தாதிகளுள் ஒன்று திரிபந்தாதி. அது வடதிருமுல்லைவாயில் அந்தாதி ஆகும். இதனுள் சில பாடல்கள் யமகமாக உள்ளன. மற்றொன்று “திருவேகம்பர் அந்தாதி” எனும் இந்நூல் ஆகும். இதனுள் அனைத்துப் பாடல்களுமே யமகமாக உள்ளன.

பதிற்றுப்பத்து அந்தாதியில் நூறுபாடல்களும் பத்துப்பத்தாகப் பிரிக்கப்பட்டு வெவ்வேறு யாப்பில் (செய்யுள் வடிவில்) அமைந்திருக்கும். யமக அந்தாதியில் முதலடியின் தொடக்கத்தில் வந்துள்ள சொற்றொடர்களே அடுத்தடுத்த அடிகளின் தொடக்கத்திலும் வரும். ஆனால் வெவ்வேறு பொருள்தரும். திரிபந்தாதியில் அவ்வாறு மீண்டும் மீண்டும் வரும் தொடர்களில் முதலெழுத்து மட்டும் வேறுபட்டிருக்கும்.

திருவேகம்பர் அந்தாதி என்னும் இந்நூல் நூறு பாடல்களைக் கொண்ட யமக அந்தாதி ஆகும். 94 பாடல்களே

கிடைத்துள்ளன. ஆறுபாடல்கள் கிடைக்கவில்லை. காப்புச் செய்யுளும் கிடைக்கவில்லை. யமகத்தைத் தமிழில் 'மடக்கு' என்பர். இது சொல்லணியாகும். அந்தாதி குறித்த செய்யுள் இலக்கணச் செய்திகளை ஆதீனப்புலவர் சித்தாந்த சைவமணி திரு த. ச. மீ அவர்கள் எழுதியுள்ள முதற்பதிப்பின் முகவுரையில் விரிவாகக் காணலாம்.

நம் ஆதீன மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் ஆதீனத்து பதினைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ அம்பலவாணதேசிக மூர்த்திகள் அவர்களின் அருளாட்சி காலத்தில் ஆதீனத்திருக்கூட்டத்துத் தம்பிரான் சுவாமிகளாக விளங்கிய ஸ்ரீ அம்பலவாண முனிவரிடத்தில் இந்தத் திருவேகம்பர் அந்தாதியைப் பாடம் கேட்டுள்ளார்கள். பின்பு அவர்கள் பாடஞ்சொல்லி வந்த காலத்தில் பாடம்கேட்ட மதுரை இராமசாமிபிள்ளை என்னும் ஞானசம்பந்தப்பிள்ளை அவர்கள் தாம் பாடம்கேட்ட முறையிலேயே பதவுரை ஒன்று எழுதி அச்சிட்டுள்ளார். மேலும் வடதிருமுல்லை வாயில் அந்தாதியையும் தாம் மகாவித்துவான் அவர்களிடம் பாடம்கேட்டு அம்முறையிலேயே பதவுரையும் எழுதி அச்சிட்டுள்ளார். இச்செய்திகள் முதற்பதிப்பின் முகவுரையால் அறியப்படுவன. இதன்மூலம் மாதவச் சிவஞானயோகிகளின் சாத்திர உரைகள் மட்டுமன்றி இலக்கிய நூல்களும் வழிவழியாகப் பயிலப்பெற்று வந்துள்ளமையை அறியலாம்.

அம்முறையிலேயே இந்த அருமையான இலக்கியமாகிய திருஏகம்பர் அந்தாதி பதவுரையுடன் மறுபதிப்பாக வெளியிடப் பெறுகின்றது.

எழுத்துக்கள் ஒன்றோடு ஒன்று பொருந்தி நிற்கும் முறை, தமிழ்மொழியிலும் வடமொழியிலும் உள்ள அருஞ்சொற்பொருள் வளம், தலச்சிறப்பு தொடர்பான செய்திகள், சைவசித்தாந்தக் கருத்துவளம், திருமுறைகளின்

பெருமை, சிவபக்தி உணர்வு, நினைவாற்றல் எனப் பற்பல சிறந்த பேறுகளை இந்நூலினைக் கற்பதன்மூலம் பெறலாம். இந்நூல் "கம்பர் அந்தாதி" என்று சுருக்கமாக வழங்கப்பெறும். இந்நூலின் சிறப்பையும், தலச்சிறப்பையும் ஆதீனப்புலவர் திரு. த.ச.மீ அவர்கள் விரிவாக எழுதியுள்ளார்கள்.

ஆதீனத் திருக்கோயில் திருப்பணிகள், மகாகும்பாபிஷேகம், குருபூஜை விழாக்கள், அறிஞர்களுக்கு விருது வழங்கும் வைபவங்கள், சைவசித்தாந்த சைவத் திருமுறை நேர்முகப் பயிற்சி மையங்களின் செயல்பாடுகள், ஆதீனத் தலைமை மடத் திருப்பணிகள், ஆதீனக் கல்வி நிலையங்களுக்கான ஆக்கப் பணிகள் என அனைத்துத் துறைகளிலும் தம் அருட்பரிபாலனத்தை அனைவரும் உகந்து போற்றும் முறையில் சிறப்புற ஆற்றி, சிவஞானச் செங்கோல் ஓச்சியருளும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் இருபத்து நான்காவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருவுளப்பாங்கின் வண்ணம் இந்நூல் வெளிவருகின்றது. அடியார்கள் இந்நூலினை வாங்கிக் கற்றும் கற்பித்தும் குருவருள் பெற்றுய்வார்களாக.

எளியேனையும் கருவியாகக் கொண்டு குருவருள் நல்கும் ஸ்ரீலஸ்ரீ குருமாகசந்நிதானம் அவர்களின் பொன்னார் திருவடிகளைப் போற்றித் துதிக்கின்றேன்.

**இங்ஙனம்,**

**சிவஞானசுவாமிகள் அடிப்பொடி**

**சு. குஞ்சிதபாதம்,**

**ஆதீனப்புலவர்.**

திருவாவடுதுறை

*08.04.2018*

உ

சிவமயம்

# முதற்பதிப்பின் முன்னுரை

**"நச்சி நாளும் நயந்தடி யார்தொழ**
**இச்சை யாலுமை நங்கை வழிபடக்**
**கொச்சை யார்குறு கார்செறி தீம்பொழில்**
**கச்சி யேகம்ப மேகை தொழுமினே."**

தொண்ணூற்றாறு வகைத் தமிழ்ப் பிரபந்தங்களுள் அந்தாதி என்பது ஒன்று. அது முதற்செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்து, அசை, சொல், சீர், அடி முதலியவற்றில் ஏதேனும் ஒன்று, அடுத்த செய்யுளின் முதலில் அமையவும், நூலின் இறுதிச்செய்யுளில் உள்ளது முதற்பாட்டின் முதலாக அமையவும் பாடப்படுவது. இப்படி வருதல் மண்டலித்தல் என்று வழங்கப்படும். இவ்வந்தாதி யாப்புவகையினால் பலவாகும். அவை, கலித்துறையந்தாதி, வெண்பாவந்தாதி, பதிற்றுப்பத் தந்தாதி முதலியனவாம்; அவற்றுள், திரிபாகவும் யமகமாகவும் அமைந்தவை முறையே திரிபந்தாதி எனவும், யமகவந்தாதி எனவும் வழங்கப்படும். திரிபைத் திருகல் என்றும் திருக்கு என்றும் கூறுவர். திரிபும் யமகமும் ஒரே அந்தாதியிற் கலந்து வருதலும் உண்டு. இவ்வகை நூல்கள் சொற்றொடர் நிலைச்செய்யுளின் பாற்படும்.

சொல்லணியாகிய யமகம் இந்நூலுள் அமைந்து விளங்குகின்றது. யமகமாவது பல அடிகளிலாயினும், ஓரடியிற் பல இடங்களிலாயினும் வந்த எழுத்துத் தொடர்களே மீண்டும் வந்து பொருள் வேறுபடுவது. இது தமிழில் மடக்கு எனப்படும். இந்நூலிலுள்ள செய்யுட்களிலெல்லாம் நான்கு அடிகளிலும் முதல் எழுத்து முதலாகச் சிலவும் பலவும் ஒன்றி நின்று வெவ்வேறு பொருள் விளைவித்தலைக் காணலாம். யாப்பிலக்கணநூல் கூறும் நாற்பத்துமூன்று தொடைகளுள் அந்தாதியும் ஒன்றாம்.

**அடியும் சீரும் அசையும் எழுத்தும்**
**முடிவு முதலாச் செய்யுள் மொழியினஃ(து)**
**அந்தாதித் தொடையென் றறைதல் வேண்டும்**

என்றார் நத்தத்தனார்.

படிப்பவர்களுக்குச் சொற்றொடரைப் பிரிக்கும் முறை, ஒரு சொல்லின் பல பொருள்கள், பழைய வரலாறு முதலியவற்றை எளிதில் அறிந்துகொள்ளவும், ஞாபகசக்தியை அதிகப்படுத்தவும் தக்க கருவிகளாக இருத்தலின், பண்டைக்காலத்தில் தமிழ்நாட்டில் அந்தாதிகள் ஆங்காங்குத் தமிழ்பயின்றுவரும் மாணாக்கர்களுக்குப் பள்ளிக்கூடத்திலே கருவி நூல்களாகக் கற்பிக்கப்பெற்று வந்தன. திரிபுவகையில் திருப்புகலூரந்தாதி, மறைசையந்தாதி, பழமலையந்தாதி, திருவேங்கடத்தந்தாதி முதலியவைகளும்; யமகத்தில் திருவரங்கத்தந்தாதி, மருதூரந்தாதி, செந்தில் நிரோட்டக யமகவந்தாதி முதலியனவும் தொன்று தொட்டு அங்ஙனம் தமிழ் மாணாக்கர்களால் பயிலப்பட்டு வருகின்றன. அம்முறையில் மக்கட்கு நாளடைவில் உண்டான பயன் அதிகம். பெருங்காப்பியங்களைப் படித்து அறிந்துகொள்ள வேண்டிய செய்திகளை இவ்வகைப் பிரபந்தங்களால் எளிதில் அறிந்து கொள்ளலாம் என அறிஞர் கூறுவர்.

ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் செய்தருளிய பிரபந்தங்களில் யமகவந்தாதி திருவேகம்பர் விஷயமாக அமைந்து கம்பரந்தாதி என வழங்கும். திரிபந்தாதி வடதிருமுல்லைவாயில் என்னும் தலத்தைப்பற்றியது. அது திரிபந்தாதியாயினும் 22, 23, 26, 32, 34, 44, 46, 53, 61, 65, 70, 71, 79, 43, 80, 85, 87, 90, 95, 97, 98 என்னும் எண்ணுள்ள பாடல்கள் யமகச் செய்யுட்களாம்; திரிபும் யமகமும் ஒரே அந்தாதியிற் கலந்து வந்தமைக்கு அஃது எடுத்துக்காட்டாம். யமகம்திரிபு அந்தாதிகளாகிய இவைகளேயன்றிப் பதிற்றுப்பத்தந்தாதிகள் கலைசை, இளசை, குளத்தூர் என்னும் தலங்கள் விஷயமாக இவ்வாசிரியர் பாடியருளினர்.

கம்பரந்தாதி கம்பரது அந்தாதி என விரியும்; ஆறன்தொகை. கம்பரைப் பற்றிய அந்தாதி என விரித்தால் இரண்டனுருபும் பயனும் உடன்தொக்க தொகையாகக்கொள்க. கம்பர் என்பது கச்சியேகம்பநாதர் திருநாமமாம். இத்திருநாமம் இந்நூலுள் பல படியாக வழங்கப்பெறுவது காண்க.

வட திருமுல்லைவாயிலந்தாதி, கம்பரந்தாதிகள் நூறு கட்டளைக்கலித்துறைச் செய்யுட்களால் இயன்றன. நேரிசை வெண்பா நூறு அந்தாதியாய் வந்தால் வெண்பாவந்தாதி என்றும், கட்டளைக்கலித்துறை நூறு அந்தாதியாய் வந்தால் கலித்துறையந்தாதி என்றும் பலவிதமாய்ப் பெயர்பெறும். விருத்தவகை யானும் அந்தாதி பாடப்படும். இந்த அளவிலே செய்யுட்கள் குறைந்துவரும் அந்தாதிகளும் சிலவுள்ளன. சரசுவதி அந்தாதி, திருச்செந்தில் நிரோட்டக யமகவந்தாதிகளின் செய்யுட்டொகை முப்பஃதேயாம்.

இவ்வாதீனத்து மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பதினைந்தாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள் காலத்திலே அடியார் கூட்டத்துள் ஒருவராகிய ஸ்ரீ அம்பலவாண முனிவரிடத்தில் திருவேகம்பரந்தாதியைப் பாடங் கேட்டார்கள். பின்பு பிள்ளையவர்கள் தமது மாணவர்களுக்குத் தமிழறிவுறுத்திய காலத்து மதுரை இராமசாமிபிள்ளை என்னும் ஸ்ரீ ஞானசம்பந்தப்பிள்ளை அவர்கள் தாம் பாடங்கேட்ட நிலையிலே கம்பரந்தாதி, வட திருமுல்லைவாயிலந்தாதி என்னும் இந்த இரண்டு நூல்களுக்கும் பதவுரையெழுதி அச்சிட்டனர். இவ்வுரை இன்றேல் இந்நூல்களைப் படித்துப் பொருள் தெரிந்துகொள்ளுதல் அருமையே.

மகாவித்துவான் பிள்ளையவர்கள் பாடங்கேட்ட காலத்திலேயே இப்பதிப்பில் காணுமாறு காப்புச் செய்யுளும், முதலிறுதிகளில் ஆறு செய்யுட்களும் இறந்துபோயின. நீண்டகாலமாக விளங்கும் தமிழ்க் கருவூலம், செந்தமிழ்ச்சுரக்கறை, கல்விக் களஞ்சியமாகிய திருவாவடுதுறை ஆதீனம், மிதிலைப்பட்டிக் கவிராயர் வீடு, திருநெல்வேலி அம்பலவாண கவிராஜர், நெல்லையப்பன் கவிராஜர் வீட்டுப் புத்தகசாலைகளிலே கிடைத்த தமிழ்நூல்களை மகாமகோபாத்தியாய ஸ்ரீ சாமிநாத ஐயரவர்கள் பெற்று அச்சிட்டமை தமிழுலகு நன்கு அறியும். செந்தமிழ் நூல்களைப் பாதுகாத்தும், மாணவர்களுக்குப் பாடஞ்சொல்லியும், அச்சிட்டும்

தமிழுலகத்துக்குத் தந்த பெருமைகள் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்ததேயாகும்.

ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகளும், அவர்களுடைய முதல் மாணவர் ஸ்ரீ கச்சியப்பமுனிவரும், அவ்விருவர் மாணவர்களும் காஞ்சியம்பதியிலிருந்தே செந்தமிழை வழிவழியாகப் பாதுகாத்தமையேயன்றி, சித்தாந்த ஞான நூல்களையும் மாணவர்கட்குச் சொல்லிச் செந்தமிழையும் சித்தாந்த சைவத்தையும் உலகமுழுவதும் பரப்பிப் பெரும்புகழ் பெற்றனர். காஞ்சிப்புராணம் முதற்காண்டத்தையும், சிவஞானபோத மாபாடியத்தையும் காஞ்சிபுரத்தில் பிள்ளையார் பாளையத்திலுள்ள திருவாவடுதுறைக் கிளைமடத்திலிருந்தே இயற்றியருளினர். தமிழ்மணம் நன்கு வீசும் பெருமையை ஓர்ந்தே 'கச்சியைத் தமிழ்க்கச்சி' என்று இப்பிரபந்தத்திலும் பாராட்டினர்.

ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் பிரபந்தங்கள் முழுமையும் முதற்பதிப்பாக உருத்திரோற்காரி - ஐப்பசி (1863), இரண்டாம்பதிப்பாக நந்தன சிங்கமதி (1889), மூன்றாம்பதிப்பாக விரோதி இடபமதி (1892) ஆண்டுகளில் வெளிவந்தன. அவற்றுள் இரண்டாம் பதிப்பு, பதினேழாவது மகாசந்நிதானம் ஸ்ரீ அம்பலவாணதேசிகமூர்த்திகள் கட்டளையிட்டருளியபடியும்; முதற்பதிப்பு, மூன்றாம் பதிப்புக்கள் இராமநாதபுரம் சம்ஸ்தானம் ஸ்ரீ பொன்னுசாமித்தேவரவர்கள், அவர்கள் புத்திரர் ஸ்ரீ பாண்டித்துரைத் தேவரவர்கள் விருப்பங்களின்படியும் அச்சிட்டு முற்கூறிய மதுரை ஸ்ரீ ஞானசம்பந்தப்பிள்ளையவர்கள் வெளிப்படுத்தினார்கள்.

அப்பிரபந்தத்திரட்டில் உள்ள நூல்கள் அனைத்தும் சித்திரை - ஆயிலியம் குருபூஜை நாளிலே ஒன்றன் பின் ஒன்றாக இவ்வாதீன வெளியீடாகவரக் கட்டளையிட்டருளியபடியே இவ்வாண்டு சித்திரை ஆயிலியநாளிலே 'கம்பரந்தாதி' அச்சிட்டு வழங்கப்படுகிறது. ஸ்ரீ சுவாமிகள் அருளிய பிரபந்தங்களில் ஒன்றிரண்டு நீங்கலாக ஏனைய பிரபந்தங்கள் எல்லாம் நன்றாக ஆராய்ந்து பலவகைக் குறிப்புக்களுடன் என்னால் அச்சிடப்பெற்றன. காஞ்சிப்புராணம் முழுவதும்

பழையவுரையுடன் விரைவில் அச்சாகி வெளிவரும் நன்முயற்சியையும் விநயமாக விண்ணப்பிக்கிறேன்.

செந்தமிழ்நாடு செய்த தவப்பயனால் திருவாவடுதுறை ஆதீனத்தில் இப்போது இருபத்தொன்றாவது குருமகா சந்நிதானமாக வீற்றிருந்தருளிச் சிவஞானச் செங்கோல் செலுத்திவரும் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள் பெருங்கருணையுடன் தமது ஞானபீடத்தின் பெருமைக்கு ஏற்ப மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கையும் தமது ஆதீனத்திலே உள்ள முன்னோர் அருளிய உரைகளுடன் நன்கு ஆராய்ந்து வெளியிடக் கட்டளையிட்டருளியும், கற்றோர் சிலரேயன்றி மற்றோர் பலரும் எளியநிலையிலே சித்தாந்த சாத்திரங்களின் உரைநடையை முதற்கண் படித்தறிந்து நூல்களிலும் உரைகளிலும் தமதுகருத்தைச் செலுத்திக் கற்றுய்யுமாறு வேண்டிய விளக்க உரை நடையைப் புதுவதாக எழுதுவித்து அச்சிடுவித்து வழங்கியும், சமயசாத்திர உண்மைகளையும் திருமுறைகளின் உண்மைகளையும் எல்லா மக்களும் எளிதில் அறிந்து இன்புறுதற்காக ஆண்டுதோறும் சித்தாந்த சைவமாநாடு, திருமந்திரமாநாடு, திருவாசகமாநாடு முதலிய மாநாடுகளைத் திருவாவடுதுறையிலும், திருவெண்ணெய்நல்லூரிலும் கூட்டிச் சிறந்த சித்தாந்தப் பேரறிஞர்களைக் கொண்டு விரிவுரைகளாற்றப் பணித்தும் வருவது உலகறிந்த செய்தியே.

இப்பதிப்பில் வழக்கம் போலவே படிப்போருக்கு எளிதில் பதங்களைப் பிரித்துப் பொருள்தெரிந்து கொள்ளுமாறு பாடம் சொல்வது போலவே உரை பதிப்பிக்கப்பட்டுள்ளது. தலவரலாறு, நூலாராய்ச்சி, செய்யுள் முதற்குறிப்பகராதி முதலியனவும் சேர்க்கப்பட்டுள்ளன. அடியேன் அயர்ச்சியினால் நேரிட்ட குற்றங்களைப் பொறுத்துத் திருத்தங்களைத் தெரிவிக்கும்படி அறிஞர்களை வேண்டுகின்றேன்.

திருவாவடுதுறை
10-04-64

இங்ஙனம்,
த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை,
ஆதீனவித்துவான்.



ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள்

## நூலாராய்ச்சி

கம்பரந்தாதியாகிய இந்நூலில் காஞ்சித்தலத்தின் செய்திகளும், அகப்பொருட் செய்திகளும், நூலாசிரியரால் அங்கங்கே பலபடியாக எடுத்துப் பாராட்டப்பெற்ற இத்தல சம்பந்தமான செய்திகளும், பண்டை நூற்கருத்துக்களும், சொற்பொருள் நயங்களும் பிறவும் நன்கு அறியலாம்.

**தலப்பெயர்:** *காஞ்சி (1) க+அஞ்சி: க - பிரமம்; அஞ்சுதல் - விரும்புதல்; பிரமமாகிய சிவபெருமான் அஞ்சிக்கப் பட்டிருக்கும் தலம். (2) க - பிரமன்; பிரமதேவரால் விரும்பப்பட்டது. (3) க - தலை ; தலைமை பெற்றுள்ளது. (4) க அஞ்சி - பேரின்பம் தருவது. (5) நிலமகட்குக் காஞ்சி என்னும் உந்தித்தானத்தை ஒத்தது. (காஞ்சிப்புரா - திருவேகம்பப்பட - 34 -36).*

*பன்னிரண்டு பெயர்களையுடைய தலம் சிறந்தது என்பர். பிரமபுரம் வேணுபுரம்.... கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால். (திருஞான - புரா - 14). இக்காஞ்சீபுரமும் (1) புவனசாரம், (2) மும்மூர்த்தி வாசம், (3) விண்டுபுரம், (4) காஞ்சி, (5) கலிசித்து, (6) இலயசித்து, (7) சகலசித்திபுரம், (8) தபோமயம், (9) பிரமபுரம், (10) ஆதிபீடம், (11) கன்னிகாப்பு, (12) சிவபுரம் எனப் பன்னிரு காரணப்பெயருடன் விளங்குவது. (திருவேகம்ப: 55-8).*

**சிவபெருமான்:** *ஏகம்பவாழ்வு, மாவுறை கம்பன், கம்பத்தன், காமக்கோட்டிமணாளன், கம்பம் மேவிய வான்பொருள், கம்பைக் கம்பன், ஏகம்பவாணர், கம்பவாணன், கச்சிப்பிரான், காஞ்சிநாதர், கச்சிவாணன், கம்பமாவடி வாழ்வான், கச்சிவானவன் முதலியன. சிறுத்தொண்டர்தம் தஞ்சு (37). வினைதிருக்கு ஆமக்கோள் தமம் மாற்றிடும் கம்பன் (40).*

**அம்பிகை:** *காமாட்சியம்மை. நாலெண்பகுப்பும் வளர்ப்பாள் - 18. திருக்காமக்கோட்ட முதல்வி - 40. காமக்கோட்டி, கம்பா நதிப்பால் பூஜைசெய் கவுரிக் கருணோக்கம் பாலித்த கோ - 93.*

**விநாயக்கடவுள்:** விகடச்சக்கர விநாயகர். "கைக் கனத்து ஆனனன்" - 28.

**முருகக்கடவுள்:** மாவடிவைகும் செவ்வேள்; மயில் ஊர் பவம் தன் ஐயா - 45, செந்தில்நகர்ச் சேவலங் கொடியான் அத்தன் - 23 கந்தமாதன வெற்பாளர், வள்ளி கொண்கன் - 70, நவகங்கைக்கு அனற்கு ஆரற்கு உமைக்கு மகவு - 28.

**திருநாவுக்கரசு சுவாமிகள், கச்சிமேற்றளித்த தேவாரத்தில்:** "ஏலநற் கடம்பன் றாதை" எனவும், "சேந்தனை மகவாக் கொண்டார்" எனவும், திருக்கச்சியேகம்பம் பதிகத்தில் "முருகவேட்குத் தந்தைகாண், தண்கடமா முகத்தினாற்குத் தாதைகாண்" எனவும் அருளிச்செய்தமை காண்க.

**கச்சி:** நல் அஞ்சுவன சத்த அன்பு உரவோர் வாழ் கலிக்கச்சி - 41, பாலிக்குமரிக்கு வாழ்வான கச்சிப் பதி - 15, வாத்தியம் இரவும் பகலும் ஒலிக்கும் கம்பம் - 64, தபோதனர் வாழ்கம்பம் - 71, தமிழ்க்கச்சிக்கம்பம் - 79, தவந்தானங் காலந்தொறும் மறவார் தங்கு கச்சி - 69, மானந்தவாதவர் சூழ் கம்பம் - 82, ஆரணஞ் சூழ் கம்பம் - 64, அங்கனைகள் தவா நடஞ்செய் கச்சி - 29.

கச்சி, ஏகம்பம், கம்பம், காஞ்சி, கச்சியேகம்பம், தமிழ்க்கச்சி என இந்நூலுள் பாராட்டப்பட்டுள்ளது.

**சிவபெருமான் வீற்றிருக்கும் இடங்கள்:** திருவேகம்பம், அடியார்கள் இதயம், வேதசிரசு.

**கச்சி எல்லையிலுள்ள தலங்கள்:** 1. கச்சியேகம்பம், 2. திருமேற்றளி, 3. திருவோணகாந்தன்தளி, 4. கச்சித் திருநெறிக் காரைக்காடு, 5. கச்சி அனேகதங்காவதம் என்பன. கச்சிமயானம் தேவார வைப்புத் தலம். (57 -61).

**திருமேற்றளி:** இது கச்சி யேகம்பத்திற்கு ஒருகல் தொலைவில் மேல்பாலுள்ளது. கச்சிமேற்றளி எனவும், காஞ்சி மேற்றளி எனவும் இது வழங்கப்படும். தளி - கோயில் (57). உருத்திரர்கள் பூசித்த நூற்றுப் பதினெட்டுத் தலங்களிலும் இது முதன்மைபெற்ற தலம்.

சுவாமி: மேற்றளிநாதர், ஓதஉருகீசர்

அம்மை: காமாட்சி அம்மையார்.

**திருவோணகாந்தன்தளி:** இது கச்சிஏகம்பத்திற்கு மேற்கில் சர்வதீர்த்தத்துக்கு வடமேற்றிசையில் அரைக்கல் தொலைவில் உள்ளது (58).

சுவாமி: ஓணேசுவரர், காந்தேசுவரர்

அம்மை: காமாட்சியம்மையார்

**கச்சித் திருநெறிக் காரைக்காடு:** இது காஞ்சீபுரத்தின் கீழக்கோடியில் உள்ள ஆடிசன்பேட்டைக் கடைத் தெருவிலிருந்து ஒன்றரைக்கல் தொலைவில் வடகிழக்காகச் சென்று அடையத்தக்கது. முன்பு காரைச்செடி அடர்ந்த காடாக இருந்தமையால் இப்பெயர்பெற்றது. காலிமேடு, சத்தியவிரதம், இந்திரபுரம் என்னும் பெயர்களாலும் இது வழங்கப்படும் (60).

சுவாமி: காரைத்திருநாதர், சத்திய விரதீசர்

அம்மை: காமாட்சி அம்மையார்

**கச்சி அனேகதங்காவதம்:** கச்சியேகம்பத்துக்குத் தென்மேற்கிலே புத்தேரித் தெருவுக்கு மேற்றிசையில் ஒருகல் தொலைவிலே வயல்வெளியில் இத்தலமுள்ளது. விநாயகர், குபேரன் பூசித்ததலம்.

சுவாமி: அனேகதங்காவதீசர்

அம்மை: காமாட்சியம்மையார்

**கச்சிமயானம்:** இது வைப்புத்தலம். ஏகம்பத்தினுள் கொடிமரத்தின் முன்னர் சிவபெருமான் வேள்வி செய்த கச்சிமயானம் உளது. மயானப்பதிவளர்கச்சிப் பிரான் - 61.

**தலவிருட்சம்:** மா. ஒற்றை மாந்தரு மங்கல வைப்பாகக் கொண்டான் - 75. வாழிடம் சூதமதாம் ஏகம் பத்து - 81. இது நால்வேதங்களின் வடிவாயது. நால்வகையான கனிகளைத் தருவது என்பர் மாவடிவாய் அவதாரம்செய் ஏகம்பவாணர் (47).

**அம்மையார் தழுவக் குழைந்தமை:** கம்பை வாய்த்தழுவக் குழைந்தார் - 73; "மலைக்குலக்கொடி ........ காதலா லிறுகிடத்

தழுவ.......கொலைக்க ளிற்றுரி புனைந்ததம் மேனி குழைந்து காட்டினார் விழைந்த கொள்கையினார்" (திருக்குறிப்புத் - செய்- 64) "தணந்த ....மலை பயந்த தரளஃூரற், கணங்குழையாள் ... வலிந்திறுகத் தழீஇக் கொள்ள அமையாக் காதல், மணந்தருளிக் குறிபூண்ட ஒருமாவிற் பெருமானை வணக்கஞ் செய்வாம்" (கடவுள் வாழ்த்து - 2). ".....காதலி தழுவலோடும்,.... சோதித்திருவுருக் குழைந்துகாட்டி, அணிவளைத் தழும்பினோடு முலைச்சுவ டணிந்தா ரையர்" (தழுவக் குழைந்த - 380).

பராசத்தி பூசனைகொண்ட புனிதன் (79). இதனை, "ஏலவார் குழலாளுமை நங்கை யாதரித்து வழிபடப் பெற்ற கால காலனைக் கம்பனெம்மானை" என வ்ரும் சுந்தரர் தேவாரத்தான் அறிக.

**சிவனடியார் வழிபாடு:** அடியவர்களைக் கண்டால் பலமுறை வணங்கல், புகழ்தல், செய்யும்பணி யாது எனக்கேட்டல், ஆதனம் கொடுத்து உபசரித்தல் வேண்டும் என்பர் (94). வரஞான உதயர்தம் மா அடிவாய் அவம்தீர்சிந்தையார் எம்மை ஆள்பவரே - 47, கடவாத அன்பர் - உவராத என்பர் - 43. வியன்பத்தி விளைவேதா - 80, சிவனடியார்களே எம்மை ஆள்பவர் -47, தொண்டர்க்குத் தொண்டனாம் தன்மை - 39, அவன் அன்பர்கள் தமது ஏவல் - 51.

"பேயன்ன புறச்சமயப் பிணக்கு நூல் வழியனைத்தும் பிழையே அன்றி, வாயன்மை தெளிந்து சைவ சித்தாந்த வழிதேறி அதீத வாழ்வில், போயண்மி ஐந்தெழுத்தும் திருநீறும் கண்டிகையும் பொருளாக் கொண்ட, நாயன்மார் திருக்கூட்டம் பணிந்திறைஞ்சும் பெரும்பேறு நான் பெற்றேனால்" (காஞ்சிப்புராணம்).

**முனிவர்கள்:** அகத்தியர், நாரதர் - 55 பராசர மைந்தன் - 68.

**முனிவர் தவம்:** பனியையும் வெப்பத்தையும் குளிரையும் பொறுத்துத் தவம்செய்யும் முனிவர் - 57.

**சிவபெருமானுக்குரிய சில திருநாமங்கள்:** தற்புருடர், மகாதேவர், ஈச்சுரர், ஆதிரைநாளான், மணிகண்டன்,

ஆண்டவன், ஆரணன், கல்லால் யோகமர்சித்து, ஆண் பெண் அலி நாமன்.

**திருநடம்:** எண்ரசுண்வ பொருந்தும் நிருத்தம் - 52, தாண்டக நாடகம் - 67.

**தேவாரம்:** மூவர் பகிர்ந்தருளும் பதிகம் (16).

**திருக்கோவையார்:** ஓரன்பர் கூறிடச் சிற்றம்பலத் திருக்கோவையார் கரத்தால் வரைந்தாண்ட செல்வா (88).

வரங்கேட்டல்: "வளந்தரு பாமாலை அடியடி தோறும் சுவைபெறப் பாட அடியோங்கட்கருள்" (53), "உன் கழலை முறுக்கம் பாகம், பாகமுறுந் தமிழ்பாடுங் கடன்பணி" (93).

**நாயன்மார்:** திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் - 11, 54, சிறுத்தொண்ட நாயனார் 37, செருத்துணை நாயனார் எறிபத்தநாயனார் - 55.

**திருவிழா:** சாறுவ தீர்த்தத்தில் தெப்பத் திருவிழா - 27.

**சிவராத்திரி:** கடமாதங் கம்பப்பிரானைச் சிவநிசிக் கண் வணங்கில் - 87.

**மலைகள்:** சந்தக்குன்று, கந்தமாதனம், மந்தரம்.

**நதிகள்:** பொன்னி, சாணவி, பொருந்தம், குமரி.

**மீன்வகை:** வரால், சேல், கெண்டை, உள்ளல்.

**பரசமயிகள்:** புத்தர், வாமிகள், அமணர், திகண்டாவாதி முதலியோர்.

**தலங்கள்:** திருமேற்றளி - 57, திருவோணகாந்தன்தளி - 58, அனேகதங்காவதம் - 59, கச்சிநெறிக் காரைக்காடு - 60, கச்சிமயானம் - 61, திருக்காமக் கோட்டம் - 40, திரு ஆடானை - 56 இவை யமகத்தில் அமைந்துள்ளன.

கழுமலம், கடம்பவனம், காசி, கமலை, கஞ்சாறு, திருக்காட்டுப்பள்ளி, திருஅம்பர், புள்ளிருக்குவேளூர், திருக்களர், திருநெல்வேலி, திருவைகா, திருவதிகை, இடைமருது, திருவாடானை, திருவம்பலம், திருவையாறு, திருமாற்பேறு, செந்தில் ஆகிய தலங்களும் குறிக்கப்பட்டுள்ளன.

**புராணச்செய்திகள்:** பாம்பு தோளணியாகவும், ஆமையோடு மார்பணியாகவும் அணிந்தமை ; கங்கையைத் தரித்தமை ; உமாதேவியாருக்கு வாமபாகத்தை அளித்தமை, உமாதேவியாரைப் பாதித் திருமேனியில் கொண்டமை; திரிபுரத்தை எரித்த காலத்துப் பூமி முதலியவற்றைத் தேர் முதலியனவாகக் கொண்டமை; கொன்றைமாலை, ஆத்திமாலை, எலும்புமாலை இவற்றை அணிந்தமை; மத்தம் சூடியமை; திருமால் பிரமர்அடி முடி தேடியும் அறியப்படாமை; கல்லானை கரும்பருந்தச் சித்து இயற்றியமை; கருப்பவதிபொருட்டுத் தாயுமாயினமை; நஞ்சணிகண்டம் உடைமை; அக்கினிதேவன் கரமறுத்தமை; திசைமுகனைச் சிரங்கொய்தமை; பிரமதேவனைப் படைத்தற்றொழில் செய்யாதே, பேரின்பப்பெருவாழ்வு பெற்று வாழ் என்றமை (21) வியாசர் கை தம்பித்தமையும், வழங்கியமையும் - 68.

**நெஞ்சறிவுறுத்தல்:** *20, 33, 34, 36.*

**இயமபயம்:** "மறலி வந்தனையா அது நரகுபார் என்னுமுன்" (45), "மலக்கு நாச்சென்றுவிக்கக் காலன் வந்து எய்துமுன்" (72), "என்முன் தருமன் வந்து ஆத! போது, அனது ஆம் நரகு ஆர வருந்துக என்னாமல்" (71), "சமன் அதிருமேல் தளிவிட வேறு ஏது உறுதி திருத்துவர்" (57), "உயிர்போம் நெறிக்கு ஆரைக் காட்டுவிர்" (60), "உற்றார் ஆருளரோ உயிர் கொண்டு போம்பொழுது குற்றாலத்துறை கூத்தனல்லால் நமக்கு உற்றா ராருளரோ" (நாவுக்) "சமன் நாம் ஆலை அடி அடி என்னாமல்" (53).

**சைவநூற்கருத்துக்கள்:** ம ந - மல திரோதங்கள், ய - ஆன்மா ; ஆன்மா கண் போன்றது, இறைவர் ஆதித்தன் போன்றவர் (24), காரண காரியமாம் பஞ்ச பூதக்கலப்ப (64), ஏகம் பத்தான் அருளும் (81), சிவனடியார்களே எம்மை ஆள்பவர் (47), மாலை அடி அடியோம், அடியவர் ஏவற்றொண்டு, முப்பத்தாறு தத்துவங்கள்: கமையான் அப்பதினைந்தும் மூவேழும் நீக்க வரந்தரும் (61), சிவம் தேங்கு அடியார் அர ஓசை செவிமடுத்தல்

(8), வந்தனைசெய் அடியார்தம் பணி செயல் (13), சிவபெருமான் அங்கி பானுமதி ஆகிய மண்டலங்கள் மூன்றையும் பேதித்து மனத்தகத்தில் தங்குதல் (54), ஞானமிகுதியால் கன்மமலம் எட்டுணையும் பொருந்தாமை, பரிபக்குவர் அறிவிலே செவ்வகத்திமலரின் நிறம்போன்று சிவபிரான் விளங்குதல் (55), பிரமவிட்டுணுக்கள் பசுக்களே, பதியல்லர், பரமபதி சிவபெருமானே; பரிபக்குவரது கன்மபாசமாகிய பஞ்சுக்கு இறைவர் அக்கினிமாலை போன்றவர்; பழ அடியார் கூட்டம், குரு லிங்க சங்கம வழிபாடு; திருவைந்தெழுத்தை உச்சரித்தலால் சிவபுண்ணியம் முதிரும்; திருமால் பிரமர் அடியார்களே, கடவுளராகார்; இறைவர் அரு உரு அருவுருவங்களைக் கடந்து நிற்றல், பரவுணர்வின்கண் விளங்குதல்; விழுமந்தவாதவர் சார்பு.

**சில சொற்களும், சொற்றொடர்களும்:** மத சமனம்: மதம் - சினம். குமரிக்குறும்பு : குமரி - அழியாமை. பேய்த்தேர் - கானல். வந்து - காற்று. எருவை - குருதி. கவளக்கரி; கவளம். யானம் - வாகனம். நன்னெறி - சிவஞானம். மத்தம் - செருக்கு, ஊமத்தம்பூ. வெண் பாவை - கலைமகள். இடைமருமான் - கண்ணன். அல்லாக்கும் - துன்புறும். தமம் - இருள். செவ்வகத்திப்பூ. தரதமம் - தாழ்ச்சி உயர்ச்சி. அருந்துதி - அருந்ததி. சங்கேதன். கோட்டம் - தடாகம். கழகம் - நிருத்தம் புரியுமிடம். சூள் - வரைவின்மகளிர். தகரம் - மயிர்ச்சாந்து. அமேயன் - பிரமாணாதீதர். சமவேதன். திருவோணகாந்தன் - திருமால். திருக்கு - குற்றம். காந்தன் - கணவன். தீர்த்தன் - பரிசுத்தன். உருப்படுதல். சுத்தரூபமாதல்.

**அகப்பொருட்டுறைகள்:** போர்வயிற்சென்ற தலைவன்நீடத் தலைவி வருந்தல் 1; நற்றாயிரங்கல் 31, 32, 83, 88; கார்காலக் குறிகண்டு தலைவி கவன்றுரைத்தது - 37; புதல்வனொடு புலத்தல் - 38; தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் - 44; தலைவன் நீடத் தலைவி வருந்தல் - 50, 63, 69, 79; பாங்கி தலைவி குறிப்பறிதல் - 52; அலர் அறிவுறுத்தல் - 56; தலைவி இயலிடம் பாங்கற்குணர்த்தல் - 58; கல்விமேற்பிரிவு நீயே கூறு என்றல் -

62; திருவேகம்பநாதர் பவனி வருதலைத் தரிசித்து மால்கொண்டு நிறையழிந்த மாது சொல்லியது - 65; மாலை விருப்புரைத்தல் - 68, 91; பரத்தையிற்பிரிந்த தலைவன் நீடத் தலைவி வருந்தல் - 70; இரவரவுரைத்தல் - 73; தழைநயப்பு உரைத்தல் - 74; மாலையம் பொழுதுகண்டு இரங்கல் - 78; விதியொடு வெறுத்தல் - 86.

**அணிகள்:** உவமை, உருவகம், தன்மைநவிற்சி, உயர்வுநவிற்சி, எடுத்துக்காட்டணிகள்.

**நூல்கள்:** திருக்கோவை (88) கம்பரந்தாதி (22).

**எட்டு அன்பர்:** லேக்கபத்தர் - இராயச அலுவலர். இவன் ஆர்? இவனைவரையும் என்னாது, எனைச்சேர்த்து வரையும் கம்பர் (74). "எழுதுங் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே" என்பது தேவாரம். எழுதுவிக்கும் எனப் பொருள்கொள்க. இலிகிதம்; இலேகபத்திரம்; இலேககர் - ஏட்டன்பர்.

**சோதிட நூற்கருத்து:** கடகம் மகரம் மீனம் அல்லாத இராசிகளில் செவ்வாய் காலம் நீட்டித்து நின்றால் மழையில்லை (6).

**தசகாரியம்:** ஏகம் பத்தான் அருளும் - 81.

**நந்தனவனம்:** பன்னந்தனவன மாக்கேம் - 26.

**முத்தித்திறம்:** பரமானந்த முத்தித்திறம் - மால் நந்த முத்தித்திறம் தந்து ஆண்டருள் - 82.

சிராப்பள்ளிநாதர் ஒரு வணிகப் பெண்ணுக்கு அன்னையாகிவந்த செய்தியை, "பத்தும் முற்று கருப்பத்திக்கு, அணங்கு! அணங்கு எய்தல் என்று அன்னை பண்பாகி" (14) என அமைக்கப்பட்டது. அன்னை பண்பாகி என்பது பெயர்.

உ - வ தீர்த்த ஒப்பின் பெயர் - (உவமை). வெண்ணிற்றொளிச்சுவேதர் - தவளவண்ணர் - 80.

கீழ்மக்கள் வன்மொழியால் மயங்கிச் சிறு தெய்வ வழிபாடு செய்யாமல், நீ யாவன் என்று ஆராய்ந்து சிவனடியார்களுக்கு ஏவல்செய் - 51.

திருவேகம்பத்தை வணங்கக் கேடில்லை ; அம்மையார் முப்பத்திரண்டு தருமங்களையும் விருத்தி செய்தமை ;

பெருங்குற்றங்களாவன: திருவேகம்பரிடத்துப் பத்தி செய்யாமை, திருவேகம்பத்தை வணங்காமை, அடியார்கூட்டத்தில் சேராமை, உண்மை ஞானத்தைக் கருதாமை என்பன. சாறுவ தீர்த்தத்தில் தெப்போற்சவத்தைத் தரிசிப்பது சிறந்த புண்ணியமாதல்.

நந்திதேவர் ஆணை - 30, பஞ்சகவ்வியமாடல் - 25, ஆர்த்தழை வேய்ந்துகொள்ளுதல் - 20, ஏகம்பர் முத்தி - 22, வியாகரணமணி - 49, வேதாகமம் கலை கற்றதனால் முத்தி வேட்பது அறிவன்று, அநுபவ ஞானம் வேண்டும் - 80, பூசனைக்குரிய கருவி கரணங்கள் - 84, 85, சித்தாந்த சைவ ஞானபாதச் சிறப்பு - 13, தருக்கவாதம் வீண் - 89, நந்தனும் போதனும் எய்தாப்பதம் - 26, மூடர்கள் செம்மாப்பு - 66, உள்ளலை வாளை அகப்படுத்துதல் - 31, இருண்ட மனத்தினருக்கு ஒளித்தல், அன்பிலர்பால் பொருந்தாமை, ஆன் உகைத்தல், அன்பர்க்குத் தனித்தனம் - 79.

அடியார் எதிர்ப்பட்டிடில் அனந்தம் பரிசு பணிதல்: "முதல்வன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும் அயரா அன்பின் அரன்கழல் ஏத்தும் மெய்யன்பர் திருவேடங்களையும், சிவாலயங்களையும் முதல்வனெனவே ஐயுறவின்றித் தெளிந்து வழிபாடுசெய்தல்; இவ்விரண்டிடத்து மாத்திரையே தயிரின் நெய்போல விளங்கித் தோன்றி அல்லுழியெல்லாம் பாலின் நெய்போல வெளிப்படாது நிற்றலான்" என்க. எனச் சிவஞானபோதச் சிற்றுரையில் ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் உரைத்தவாறுபற்றி அறிக.

"சிவபத்தராவார் பத்தியினான் மறவாதேத்தி முதல்வனது சீபாதத்தை அணைந்த சீவன்முத்தர்;" அவரோடு இணங்குதல், அவர்சொற் கேட்டல், அவர் குணங்கள் உரைத்தல், அவரைக்காண்டல் என்பனயாவும் சிவபுண்ணியத்தை மிகுவித்துச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வடைதற்கு வாயிலாம். அவரல்லாத பாசத்தார் விபரீதவுணர்வை அறிவிப்பர்; ஆகலின், அவ்ஏனையரோடு இணங்கற்க என்பதூஉம் தெளிவாம். ஆகலின் 'விழுமந்தவாதவர் சார்பே

நயந்து விவேகங்கள் அவிழும் மந்த' (89) என முன் அருளியமையும் காண்க. அவ்விழுமம் தவாதவர் மும்மலத்தினும் மிகக்கொடியர். "மும்மலங்கள் அஞ்ஞானத்தை உணர்த்துதல் இலக்குவாய்த்துழி ஏதுவாதன் மாத்திரையே ; சிவபத்தரல்லாதார் அவ்வாறன்றி இலக்குவாயாத வழியும் வாய்க்குமாறு செய்துகொண்டு பலவகை உபாயங்களானும் தம்மோடொப்ப விபரீதவுணர்வைச் செலுத்தியேவிடுவர்; ஆகலான் அம்மலங்களினும் கொடியராகிய இவரை அவற்றினும் அஞ்சி விட்டொழிதலே அறிவுடைமைக்குச் சால்பு என்பதாம்" எனப் பன்னிரண்டாம் சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்து உரைத்தருளியமையும் காண்க.

"ஆகம் .... நற்பண்பு விரும்பாது, கை மஞ்சனம் ஆட்டாது, பன்னும் நா புகழ்தகச் செப்பாது" (84); 'அப்பு உண்டு, அரி கலவா மலர் உண்டு, வண்கம்பம் உண்டு, வனப் புண்டரிக உரியான் உண்டு, மனம் வாய் கை உண்டு' (85). இதனை,

"கொய்த பன்மலர் கம்பைமா நதியிற் குலவு மஞ்சனம் நிலவுமெய்ப் பூச்சு, நெய்தருங் கொழுந் தூபதீபங்கள் நிறைந்த சிந்தையின் நீடிய அன்பின், .... மெய்ப்பூசை, எய்த வாகம விதியெலாஞ் செய்தாள் உயிர்கள் யாவையும் ஈன்ற எம்பிராட்டி"; "கரந்தரும்பயன் இதுவென வுணர்ந்து கம்ப மேவிய உம்பர்நா யகர்பால், நிரந்த காதல்செய் உள்ளத்தள ளாகி நீடு நன்மைகள் யாவையும் பெருக, வரந்த ரும்பொரு ளாமலை வல்லி மாறிலைவகை மலர்ந்தபே ரன்பால் சிரம்ப ணிந்தெழு பூசைநா டோறும் திருவுளங் கொளப் பெருகிய தன்றே." (திருக்குறிப்பு - 60, 61).

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும், தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவன்", "வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்த வைத்து", "கண்ணாரக் கண்டு மென் கையாரக் கூப்பியும்", "கடிமா மலர் தூவி நின்று .... கைகாள் கூப்பித்தொழீர்" முதலிய திருவாக்குகள் சிந்தித்தற்குரியன. மிகச் சுருங்கியமுறையில் திருமூல தேவநாயனார் "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" என்றருளினர்.

"கற்றுக் கொள்வன வாயுள நாவுள, இட்டுக் கொள்வன பூவுள நீருள, கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம், எற்றுக் கோநம னால்முனி வுண்பதே" (நாவுக்கரசர்).

இனி, மலர் மஞ்சனம் மெய்ப்பூச்சு தூப தீபங்கள் இவைகள் ஐந்தும் சிவபூசனைக்கு இன்றியமையாத சாதனங்களாகும். "விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞான மாகும்." (தனித்திரு நேரிசை).

சிவபூசனைக்கு உரிய மலர் பறிப்பதற்குத் தாமே திருநந்தனவனம் அமைத்தலும், அதில் தாமே ஏற்ற பூக்களைக் கொய்துவந்தும் இறைவரைப் பூசித்தல் வேண்டும் என்பது விதி.



## காஞ்சித் தலவரலாறு

திருச்சேது, திருவாலவாய் (மதுரை), திருச்சிராப்பள்ளி, திருவழுவூர், திருவையாறு, திருவிடைமருதூர், திருத்தில்லை, திருமுதுகுன்றம், திருவண்ணாமலை, திருவிரிஞ்சை, திருவோத்தூர், திருக்காஞ்சி, திருவாலங்காடு, திருக்காளத்தி, ஸ்ரீசைலம், சித்தவடம், விரூபாக்கம், திரியம்பகம், திருக்கோகன்னம், திரு உச்சயினிமாகாளம், காசி, திருக்கேதாரம், பிரபாசம், இமயமலை, திருக்கயிலை முதலிய உத்தமத் தலங்களாம்.

இவ்வெல்லாத்தலங்களிலும் சிறந்தது காஞ்சியே. காஞ்சியம்பதியை நினைத்தாலும் கேட்டாலும் சொன்னாலும் வணங்கினாலும் எத்தகையோர்களுக்கும் பேரின்ப வீட்டையளிக்கும். சிவபெருமான் உமாதேவியாரோடு எக்காலத்தும் நீங்காமல் இத்தலத்தில் வீற்றிருந்தருளுவர். சிவபெருமான் ஐந்தொழிலையும் இயற்றுதற் பொருட்டு ஒருமாவடியில் 'ஏகம்பநாதர்' என்னும் திருப்பெயரால் தாமே சிவலிங்க வடிவமாயினார்.

க - பிரமன், அஞ்ச் - பூசை எனப்பொருள்படும். காஞ்சி என்பது பிரமனால் அஞ்சிக்கப் (பூசிக்கப்) பட்டது என்ற திரண்டபொருளைத்தரும். (க+அஞ்சி=காஞ்சி) காஞ்சியம் பதியின் நடுவில் தாமரைமலரைப் போன்று திருக்கோயில் விளங்கும். அக்கோயிலில் எந்நாளினும் சோதிலிங்கவடிவமாக இறைவர் எழுந்தருளியிருப்பர்; இவ்வாறு யசுர்வேதம் கூறும். சாந்தோக்கிய உபநிடதம் இப்பெருமானைச் சிதாகாசம் எனவும், இந்நகரத்தைப் பிரமபுரம் எனவும் கூறும். அதர்வணவேதம் சுவர்க்கம் எனவும், தைத்திரியம் சோதி சூழ்ந்த சுவர்க்கம் எனவும் கூறும். இத்தலத்தைத் தூரத்தில் இருந்தாயினும் அவ்விடத்திலிருந்தாயினும் வணங்கினால் எத்தகைய பெரிய பாவங்களும் நீங்கி முத்தி கைகூடும் என்று உமாதேவியாருக்குச் சிவபெருமான் கூறியருளினார். (காஞ்சிப் - தலவிசேடப்படலம் காண்க.)

காஞ்சீபுரம் கச்சி ஏகம்பம் எனவும் வழங்கப்படும். பஞ்சபூதத்தலங்களில் இது பிருதிவித்தலம். முத்தி நகரங்கள் ஏழனுள் ஒன்று. பல்லவ சோழர்கட்குச் சிறந்த இராசதானியா யிருந்தது. வேதங்களே மாமரவடிவாய்க் கம்பா நதியின் கரையில் விளங்குவது. திருக்குறிப்புத் தொண்டநாயனாரும் சாக்கிய நாயனாரும் முத்திபெற்ற தலம். க்ஷேத்திரத்திரு வெண்பாப் பாடியருளிய ஐயடிகள் காடவர்கோன் நாயனார் இங்கே அரசாட்சி செய்திருந்தார். சுந்தரமூர்த்திநாயனார் 'வாழ்ந்துபோதீரே' எனப் பதிகம் ஓதி இங்கே இடக்கண் பெற்றனர். உமாதேவியார் ஏகாம்பர நாதரை மணலால் தாபித்துப் பூசித்தார். இறைவர் அம்மையாருடைய அன்பினைச் சோதிக்கக்கருதிக் கம்பாநதியைப் பெருக விடுத்தார். அச்சிவலிங்கம் வெள்ளத்தில் மறைந்து போகாதபடி அம்மையார் அதனைத் தழுவிக்கொண்டார். இறைவர் மகிழ்ந்து அம்மையாருடைய முலைத்தழும்பும் வளைத் தழும்பும் தம்திருமேனியில் அழுந்துமாறு குழைந்து காட்டினார்.

காமகோடி பீடமும், கம்பை நதியும், காமகோட்டமும், குமரகோட்டமும் கொண்டு விளங்குவது இக்காஞ்சித் தலம்.

தொண்டை நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற தலங்களுள் கச்சி ஏகம்பம் என்பதும் ஒன்று. தேவாரம் பெற்ற தலங்கள் 32; அவற்றுள், 1. திருவேகம்பம் (சம் - 4, நாவுக் - 7, சுந் -1) பன்னிரண்டு பதிகங்கள் பெற்றுள்ளது. 2. திருமேற்றளி (நாவுக் - 1, சுந் - 1) இரண்டு பதிகங்களும், 3. திருவோணகாந்தன்றளி (சுந் - 1) ஒரு பதிகமும், 4. திருஅனேகதங்காவதம் (சுந் - 1) ஒரு பதிகமும், 5. திருநெறிக்காரைக்காடு (சம் - 1) ஒரு பதிகமும் பெற்று விளங்குவனவாம். கச்சிமயானம் வைப்புத்தலம்: திருவேகம்பத்தினுள் கொடி மரத்தின்முன் உள்ளது. ஐந்து தலங்கள் இந்த நகர எல்லையுள் தரிசிக்கவுள்ளன.

அம்மையார் தாம் பூசை செய்யும்போது கம்பையாறு பெருகிவர நடுங்கி, இறைவரைத் தழுவிக் கொண்ட காரணத்தால் கோயில் ஏகம்பம் (கம்பம் - நடுக்கம்) எனப் பெயர்

பெற்றது. ஏகாம்பரம் என்ற பெயரும் இத்திருக்கோயிலுக்கு வழங்கும். (ஏகம் - ஒன்று, ஆம்பரம் - மாமரம் = ஏகாம்பரம்) ஒற்றை மாமர முடையது; ஆம்பரம் தற்பவமாயிற்று. மாமரத்தடியில் இறைவர் வீற்றிருத்தலால் ஏகாம்பரநாதர் என வழங்கப்படுவர். பிரமா, விட்டுணு, உருத்திரர் முறையே பூசித்த இலிங்கமூர்த்திகள் வெள்ளைக்கம்பம், கள்ளக்கம்பம், நல்ல கம்பம் என்னும் பெயருடையனவாகத் திருக்கோயிலில் உள்ளன.

கச்சிமயானம் என்பது ஊழிக்காலத்தில் தேவர்களைச் சமிதையாகக் கொண்டு சிவபெருமான் வேள்வி செய்த இடம் என்பர். திருக்கச்சிமேற்றளி என்பது விஷ்ணுமூர்த்தி ஆளுடையபிள்ளையார் திருப்பதிகத்தைக் கேட்டு உருகிச் சிவலிங்க வடிவாய் அமைந்த இடம் என்பர். ஓணன் காந்தன் என்ற இரண்டு அசுரர்கள் பூசித்த இடம் திருவோணகாந்தன் தளி என்பதாம். விநாயகர், குபேரன் பூசித்த இடம் திருக்கச்சி அனேகதங்காவதம் ஆம். இந்திரன், புதன் முதலியோர் பூசித்த சிவலிங்கம் உள்ள இடம் திருக்கச்சி நெறிக்காரைக்காடு; இது காரைவனத்தில் உள்ளது. திருக்குறிப்புத் தொண்ட நாயனார் அருள்பெற்ற தலம் முத்தீசர்கோயில் என்பது.

**மூர்த்திகள் :** இறைவர் : திருவேகம்பர். அம்மையார் : காமாட்சியம்மையார், ஏலவார் குழலி. விநாயகர் : விகடசக்கர விநாயகர். முருகக்கடவுள் : மாவடிவைகும் செவ்வேள், மாவடிக்கந்தர்.

**தலவிருட்சம் :** மா.

**தீர்த்தம் :** சிவகங்கை, கம்பை முதலியன. கம்பை நதி இப்போது நிலத்தின்கீழ் ஓடுவது என்பர். உலகாணித்தீர்த்தம் என்பது காமகோட்டத்தின் பாங்கர் உள்ளது.

**புண்ணிய தீர்த்தம் :** இட்டசித்தி தீர்த்தம், மங்கல தீர்த்தம், சறுவதீர்த்தம் முதலிய எண்ணிலாத தீர்த்தங்கள் இங்கு உள்ளன. அவற்றில் தேவர்கள் வந்து நீராடுதலை ஒழியார் என்பது பெரியபுராணம்.

புண்ணியதீர்த்தம், இட்டசித்தி தீர்த்தம், மங்கல தீர்த்தம், சறுவதீர்த்தம் முதலிய எண்ணிலாத தீர்த்தங்கள் இங்கு உள்ளன.

அவற்றில் தேவர்கள் வந்து நீராடுதலை ஒழியார் என்பது பெரியபுராணம்.

புண்ணியதீர்த்தம் துரிதநாசதீர்த்தம் எனவும் பெயர் பெறும். துரிதம் - பாவம். இட்டசித்தி என்னும் தீர்த்தம் கச்சபாலயத்தில் உள்ளது. ஞாயிற்றுக்கிழமைகளில் இதனுள் மூழ்குதல் நல்ல பயனைத் தரும் என்பர். இத்தீர்த்தம் சிலப்பதிகாரத்திலும் கூறப்பட்டுள்ளது. மங்கல தீர்த்தத்தில் செவ்வாய்க்கிழமையில் முழுகுதல் சிறப்பைத்தரும். சறுவதீர்த்தத்தில் சனிக்கிழமைகளில் முழுகுதல் சிறப்புடையது; இது திருவேகம்பம் தேரடியில் உள்ளது.

**ஆலயங்கள் :** நகர் எல்லையினுள் எண்ணிறந்த சிவாலயங்கள் உள்ளன. முன்னே கூறிய தேவாரம் பெற்ற தலங்களே அன்றித் தக்கேசம், கண்ணீசம், சலந்தரீசம், சித்தீசம், அபிராமீசம், ஆதிபதீசம், இரணீசம், ரேணுகீச்சுரம், கச்சபேசம், சுரகரீசம், நவக்கிரகீசம், நாரங்கீசம், பரசுராமீசம், பராசரேசம், பலபத்திரராமீசம், பாண்டவீசம், மக்கீசம், மணிகண்டீச்சரம், முத்தீசம், வைரவீசம், வாணீசம், விடுவச்சேனீசம், வீரராகவீசம், பணாதரீச்சரம் முதலிய பெயர்கள் அவற்றைத் தாபித்துப் பூசித்துப் பேறுபெற்ற முனிவர் தேவர் முதலியோரை விளக்குதல் காண்க. இதனைக் காஞ்சிப்புராணத்தினுள் கண்டுகொள்க.

**நகர்க் காவல் :** விநாயகர், பைரவர், முருகக் கடவுள் இவர்களால் காவல்புரியப்படுகிறது என்பது தல வரலாறு.

சில இடங்கள் : யானையை ஒருமுயல் ஓடச்செய்த இடம், உயிர் நீங்கிய உடம்புகள் உயிர்பெற்று எழுகின்ற இடம், இறவாத்தானம் முதலிய இடங்களும் இந்நகரில் உள்ளன.

**1. நான்கு சிங்காசனங்கள் :** இவற்றுள் ஒவ்வொன்றை அடைந்தோரே நான்கு வேதங்களிலும் நிபுணராகி முறையே சூரியன், பிரமதேவன், திருமால், சிவமூர்த்தி இவர்களைத் தரிசிக்க அருகராகிப் பின்பு சாயுச்சியமடையத்தக்க நான்கு அரியாசனங்களும்;

**2. ஐந்து வேதிகைகள் :** பூர்வ புண்ணியம் மிகுந்த மனிதர் பிரவேசித்த மாத்திரத்தில் முறையே சர்வாபரணாதி

அலங்கிருதராதல், தேவேந்திரபோகம் முதலிய அனுபவித்தல், விருத்தாப்பியர் பாலராதல், ஊமைகள் சகலகலா வல்லவராதல், அழகுமிகுந்தவராதல் ஆகியவற்றைப் பெற்று முடிவில் சாயுச்சிய பதவியை எய்துவிக்க வல்ல ஐந்து வேதிகைகளும்;

**3. ஐந்து விருக்ஷங்கள் :** சதாகாலமும் அமிர்தஞ்சொரிகின்ற மாமரம். பூவில்லாமல் காய்க்கிற புளிய மரம், பொன்னிறமான அத்திமரம், அவற்றின் பலனை அனுபவிப்பவர் காயசித்தி அடைகின்றமை. நிழலில்லாத பொன்மரம், அடிமுதல் நுனிவரையும் புட்பமாகவே இருக்கும் இலுப்பைமரம், இவற்றின் ஸ்பரிசம் படத் தேககாந்தி அடைதல். இத்தகைய ஐந்து தருக்களும்;

**4. ஆறு பக்ஷிகள் :** தன் தொனியினால் ஆகாயத்திலிருந்து மேகங்களை வரவழைக்கும் மயில் ஒன்று; வேதாந்த ஞானமுடையதாகிக் கோவிந்த சப்தத்தை ஸ்மரிக்கும் ரிஷிகள் கூட்டத்திற்சேர்ந்து வாசம் செய்கின்ற பச்சைக்கிளி ஒன்று; சோதிட சாத்திரத்தில் தேர்ந்த மைனாப்பட்சி ஒன்று; சர்வக்கியானமுள்ளதும், சாது ஜனங்களுக்குப் பிரீதியுடையது மாகிய புறா ஒன்று; சர்வ சங்கீத ஞானமுள்ளதும் அனேக வர்ணமுள்ளதுமாகிய கோருவங்கபட்சி ஒன்று; சர்வா பீஷ்டங்களையும் கொடுத்துவரும் சக்கரவாகப் பட்சி ஒன்று ஆகிய ஆறு பறவைகளும்;

**5. ஏழு சரசுகள் :** மூழ்கினோர்களுக்கு முறையே பொன்னிறக்காந்தி, நவரத்தினகாந்தி, அபிஷ்டசித்தி, சிரேஷ்டவிருத்தி, மோட்சவிருத்தி, ஞான விருத்தி, பாப நிவிர்த்தி, வியாதி நிவிர்த்தியைத் தரும் ஏழுகுளங்களும்;

**6. எட்டுத் தடாகங்கள் :** தம்மில் மூழ்கினவருக்கு ஒன்றினால் பகற்காலத்தில் சந்திரதரிசனமும், மற்றொன்றினால் இராக்காலத்தில் சூரிய தரிசனமும்; மற்றொன்றினால் உதயத்தில் தங்க நிறமாயும், மத்தியானத்தில் வெள்ளி நிறமாயும், சாயங்காலத்தில் சிவப்பு நிறமாயும் பிரகாசிக்கும் மூன்று காம்புகளையுடைய ஒரு தாமரைப்புட்ப தரிசனமும்; மற்றொன்றினால் குரங்கு முகமும், மற்றொன்றினால் பாப

மிகுதியாதலும், மற்றொன்றினால் சிநேகரைச் சத்துருக்களாக்கலும், மற்றொன்றினால் புண்ணியவான்களாக்கலும், மற்றொன்றினால் சத்துருக்களைச் சினேகராக்கலும் செய்ய வல்ல எட்டுக் குளங்களும்;

**7. ஒன்பது சித்தலிங்கம் :** ஸ்பரிச மாத்திரத்தில் சர்வ உலோகங்களையும் தங்கமாக்கும் ஒன்பது சித்த லிங்கங்களும் இங்கே உள்ளன.

இத்தகைய இலிங்கங்களைத் தரிசிப்பவர் முறையே தேவர்களாதலும், விஷபாதையின்மையும், சர்வசித்துகளும் உண்டாதலும், மரணம் இல்லாமையும், போக விவகாரங்களை மறுத்தலும், பாப புண்ணியமில்லாத நடுநிலைமை யுண்டாதலும், உடைந்த எலும்பை ஒன்றாகப் பொருந்தவைக்கிற திறமை பெறுதலும் தேகம் இரண்டு மூன்று துண்டுகளாய் வெட்டுப்பட்டு வேறானாலும் அவற்றைக் கூட்டிவைக்கும் சக்தியும், ஆன்ம ஞானமடைதலும் உண்டாம்.

**8. ஒன்பது ஆராமங்கள் :** சதா நவரத்தினங்கள் பொழிந்திருக்கும் ஒன்பது சோலைகளும்;

**9. பேறுபெறச் செய்விக்கும் பத்துத் தானங்கள் :** இங்கடைவோர் உடனே தவசித்தியடைந்து நினைத்த மாத்திரத்தில் பலகோடி ஜன்மம் பார்த்தலும், அநேக ஜன்ம மாதாக்களைத் தரிசித்தலும், அநேககோடி மனைவிகளையும், புருடர்களையும், குமாரர்களையும், குமாரத்திகளையும், சோதரர்களையும் தரிசித்தலும், தேவ சம்பாஷணைகளைக் கேட்டலும், தேவலோகத்துத் துந்துபி முதலிய நாதகீதங்களைக் கேட்டலும், முயலுக்கு யானையைத் துரத்தும்படியான வல்லமை உண்டாதலும் பாதாளலோகத்தார் சம்பாஷணையைக் கேட்டலும், எண்ணெய் இன்றி விளக்குப் பிரகாசித்தலும், தேவலோக தரிசனம் கிடைத்தலும், திக்குப்பிரமை உண்டாதலும் ஆகிய சித்திதரும் பத்து இடங்களும்;

**10. பத்து மன்றங்கள் :** பாபங்களை விருத்தியாக்குதலும், ஊமைகளாதலும், விநோதத்திருட்டில் அறிவு தோன்றலும், சகல வித்தைகளிலும் திறமை உண்டாதலும், கோரின

ரூபத்தைக் கொடுத்தலும், அமிர்தத்தைப் பொழிதலும், நாகலோகத்தை அடையச் செய்தலும், அட்டதிக்குகளிலும் உள்ளவர் கண்டு மோகிக்கும்படி செய்தலும், சொர்ண நவரத்தினங்களைச் சொரிதலும், இரவும் பகலும் விபரீத பிரமைகளைக் கொடுத்தலும் ஆகிய இவைகளுண்டாகும் பத்துச் சபைகளும்;

**11. பன்னிரு கிணறுகள் :** தயிர், பால், நெய், கருப்பஞ்சாறு, தேன் இவை முதலியவற்றால் நிறைக்கப்பட்டுத் தரிசித்தோருக்குத் தேககாந்தி, தேகதிடம், தேகசித்தி யாவற்றையும் கொடுக்கும் விசேஷமுடைய பன்னிரு கிணறுகளும்,இன்னும் பல விசித்திரங்களும் நிறைந்து விளங்குவன.

இதனை இரட்டையர்கள் அருளிய ஏகாம்பர நாதர் உலா (கண்ணி-18-26) ஸ்ரீ கச்சியப்பமுனிவர் அருளிய கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டுவிடு தூது முதலியவற்றாலறிக. பெரியபுராணம் திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணத்தாலும், காஞ்சிப்புராணத்து விம்மிதப்படலத்தாலும் அறிக.

வேதம் பொதுவகையால் எல்லாத் தெய்வங்களையும் கூறினும் சிறப்புவகையால் சிவபெருமானைத் திரு உருத்திரத்தின் மூலம் தனது இதயத்தில் மறைத்து வைத்திருக்கின்றது என்பர்.

எட்டுத் திக்குகளினும் பொருந்திய எட்டு நாகங்களுள் பதுமன் என்னும் மாநாகம் காஞ்சியில் பிலத்தில் குடியிருந்தது எனவும், அந்தப் பிலத்தில் எழுந்தருளியிருக்கும் படி அம்மையாரை அது வேண்டிற்று எனவும் பெரியபுராணம் கூறும். இந்தப் பிலம் திருக்காமக் கோட்டத்தில் உள்ளது.

**காமக்கோட்டம்:** காமாட்சி அம்மையார் எழுந்தருளி யிருக்கும் பிலத்துவாரமாகிய திருக்கோயில்; இது காமக் கோட்டம் என்னும் பெயர் பெற்ற காரணம் பல வகைகளாக ஸ்ரீமாதவச் சிவஞானயோகிகள் அருளிய காஞ்சிப்புராணம், வீராட்டகாசப்படலம் 33-40 செய்யுட்களால் உணர்த்தப் பட்டது. இது காமகோடிபீடம் என்றும் ஆதிபீடம் என்றும் வழங்கப்பெறும்.

"தைய லாளுல குய்யவைத்த, காரிரும் பொழில் கச்சி மூதூர்க் காமக் கோட்ட முண்டாக - நீர் போய், ஊரிடும் பிச்சை கொள்வதென்னே ஓணகாந்தன் தளியுளீரே" என்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தால் இக்கோயில் ஒன்று ஒழியக் காஞ்சீபுரத்தின் எல்லையில் திருவேகம்பம் முதலாக உள்ள எந்தச் சிவாலயத்தினும் அம்மையாரது சந்நிதி அமைக்கப் பெறவில்லை என்பது சிந்தனைக்கு உரியது. விகடசக்கர விநாயகக் கடவுள் திருவேகாம்பரத்தில் தெற்குவாயிலில் ஆயிரக்கால் மண்டபத்தில் எழுந்தருளியுள்ளார்.

மதுரையில் யானை குதிரைகளை நடத்தும் வையாளி வீதி வெளிவீதி என்று வழங்கப்படும். காஞ்சியில் நீண்ட செண்டைக் கையில் ஏந்திச் சிறந்து யானையின் மேல் ஏறிச் செல்கின்ற ஐயனார் திருவுலா வருகின்ற செண்டணை வெளி உண்டு.

இமயமலையில் புலிக்கொடியைப் பொறித்து அதன் எல்லைவரையும் தனது வலிமையை நாட்டச் சென்ற கரிகாற்சோழர் இந்தக் காரிக்கடவுளை வழிபட்டு அவரிடத்துச் செண்டு பெற்றுச் சென்று அங்ஙனமே வெற்றி பெற்று வந்தனர் என்பது சரிதம்.

**"கச்சி வளைக்கைச்சி காமக்கோட் டங்காவல்**
**மெச்சி யினிதிருக்கும் மெய்ச்சாத்தன் – கைச்செண்டு**
**கம்பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தான்**
**செம்பொற் கிரிதிரித்த செண்டு"**

என அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையினுள் கூறியுள்ளமை காண்க.

**காமகோடி – பெயர்க்காரணம்:**

1. காமியத்தருமம் அங்கு ஒன்று செய்வோருக்கும் பயன் கோடியாகப் பலித்திடுதலானும்.

2. காமமாகிய செல்வத்திற்குத் தலைவராகிய குபேரர்கள் போன்ற அநேகரைத் தருதலானும்,

3. மனைவி மக்கள் முதலிய காமப்பொருள்களைக் கோடியாக இறைவி தன்திருவடியை வணங்கினோருக்குக் கொடுத்தலானும்,

4. இறைவி தன் இரு விழிகளின் கடையினுலும் கோடி காமக்கடவுளரைப் படைத்தமையானும்,

5. உறுதிப்பொருள் நான்கனுள் காமத்திற்குக் கோடியில் உள்ள வீடுபேற்றைத் தருதலானும்,

6. க என்னும் பிரமனையும், அ என்னம் திருமாலையும், ம என்னும் உருத்திரனையும் கோடிமுறை இறைவி விழியிற் படைத்ததனாலும்,

7. கா என்னும் சரசுவதியும், மா என்னும் இலக்குமியும் இறைவியின் விழிக்கோடியில் வருதலானும் காமகோடி என்னும் பெயர் பெற்றதென்பர்.

8. விந்துவடிவமாய்ச் சக்கராகாரமாக விளங்கும் அப்பிலமானது எல்லாக் காமப்பொருளுக்கும் ஆதாரமாய் நிற்றலால் காமக்கோட்டம் எனவும், சத்தி பீடங்கள் எல்லாவற்றிற்கும் முதற்பீடம் ஆதலால் ஆதிபீடம் எனவும் சொல்லப்படும்.

**வடமொழி நூல்கள் :** காஞ்சித்தலத்தின் செய்திகளையும், பெருமைகளையும் வடமொழியில் ஸ்காந்த புராணம் சனற்குமார சங்கிதை காளிகாகண்டத்தின் தீர்த்தமான்மியத்தில் கூறப்பட்டுள்ள ஐம்பத்தைந்து அத்தியாயமாகிய பஞ்சாசத் என்கிற நூலானும், சிவபுராணம் பிரமாண்ட புராணம் முதலிய பல புராணங்களினின்றும் திரட்டப்பட்ட நூறு அத்தியாய மாகிய சதாத்தியாயம் என்கிற நூலானும், மார்க்கண்டேய புராணம் வித்தியாகண்டத்தில் பேசப் பட்டுள்ள பதினான்கு அத்தியாயமாகிய காமாட்சி விலாசம் என்கிற நூலானும் விரிவாக அறியலாம்.

**தமிழ் நூல்கள் :** காஞ்சிப்புராணம் முதற்காண்டம், இரண்டாங்காண்டம் என்னும் இரண்டும் திராவிடமா பாடியகாராகிய ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகளாலும், அவர்மாணாக்கர் ஸ்ரீ கச்சியப்பமுனிவராலும் செய்யுள் நடையாக முறையே இயற்றப்பெற்றுவிளங்குவன. கலித்துறைக் காஞ்சிப்புராணம் என ஒன்றும் தமிழில் உள்ளன என்பர்.

## சிறப்புப்பாயிரம்

கங்கையு மலரின் மங்கையும் பரசும்
    காமநோக் கம்மைவண் டங்கை
கொங்கைகண் ணெழுங்கத் தழுவலு முழுதுங்
    குழைந்தருள் கம்பரந் தாதி
சங்கையின் மும்மைத் தமிழ்ப்புல வோர்க
    டமக்கொரு காட்டதா வமைத்தான்
செங்கைகள் கூப்பித் தவர்புகழ் துறைசைச்
    சிவஞான முனிவரன் மாதோ.

கருணைபொழி திருமுகத்தில்
    திருநீற்று நுதலும்
கண்டாரை வசப்படுத்தக்
    கனிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு
    பொறையுளத்திற் பொறுத்தே
பிஞ்ஞகனார் மலர்த்தாள்கள்
    பிரியாத மனமும்
மருவினர்கள் அகலாத
    ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான
    மாமுனிவன் மலர்த்தாள்
ஒருபொழுதும் நீங்காமல்
    எமதுளத்தில் சிரத்தில்
ஓதிடுநா வினிலென்றும்
    உன்னிவைத்தே உரைப்பாம்.

ஓதரிய வாய்மைச் சிவாகமங் கட்கெலாம்
    உற்றபே ராகரமதாய்
ஓங்குதிரு வாவடு துறைப்பதியில் அற்புதத்
    தொருவடிவு கொண்டருளியே

பேதமுறு சமயவா திகளுள மயக்கைப்
பெயர்க்கும்ரச குளிகையாகிப்
பிரியமுட னேவந் தடுத்தவர்க் கின்பப்
பெருங்கருணை மேருவாகி
ஆதரித் தடியேங்கள் உண்ணத் தெவிட்டாத
அமிர்தசா கரமாகியே
அழகுபொலி கலைசைச் சிதம்பரே சுரரடிக்
கதிமதுர கவிதைமாரி
மாதவர் வழுத்தப் பொழிந்தருளி யென்றுமவர்
மன்னிவளர் சந்நிதியிலோர்
மணிவிளக் கெனவளர் சிவஞான மாதவன்
மலர்ப்பதம் வணங்குவாமே.

-தொட்டிக்கலை ஸ்ரீ சுப்பிரமணியமுனிவர்.



உ
சிவமயம்

## ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் அருளிய

# திருவேகம்பரந்தாதி

## மூலமும் பதவுரையும்

1. கருமங்கை யார மருமத்த
ரேத்துசெங் காந்தளைநி
கருமங்கை யார மருமத்தர்
வாழ்கச்சி போலவெப்பாங்
கருமங்கை யார மருமத்தர்
வாய்மை கதிர்ப்பச்சென்ற
கருமங்கை யார மருமத்த
முங்கடந் தெய்தலென்றே.

பதப்பொருள் : **கரு மங்கை ஆர் அ மருமத்தர் ஏத்து** - பெருமையாகிய இலக்குமிதங்கிய அந்த மார்பினையுடைய விஷ்ணுமூர்த்தி துதிக்கின்ற; **செங்காந்தளை நிகரும் அங்கையார் அமரும் அத்தர் வாழ் கச்சி போல** - செங்காந்தள்மலர் போலும் அகங்கையினையுடைய உமாதேவியார் பொருந்திய பாதித்திருமேனியையுடைய திருவேகம்பநாதர் வாழும் காஞ்சிநகரம் போல; **எ பாங்கரும் அம் கையார் அமரும் அத்தர்** - எவ்விடத்திலும் உள்ள நல்ல ஒழுக்கத்தினையுடையார் விரும்பும் தலைவர்; **வாய்மை கதிர்ப்ப சென்ற கருமம் கையார்** - (இந்த நாள் வருவேம் எனத் தாம் கூறிய) மெய்ம்மை விளங்கச் சென்ற கருமத்தின்கண் உவர்ப்புறார்; **அமரும் அத்தமும் கடந்து எய்தல் என்று** - (ஆதலால்) அந்தப் போரையும் காட்டையும் நீந்தி (இத்தேயத்தை) அணுகல் எந்நாளோ என்றவாறு.

பாங்கியே யான் அறியேன் என்பது எஞ்சிநின்றது. முதலடியில் அம்மருமத்தர் என்பது அமருமத்தர் என மகரவொற்றுத் தொக்கு நின்றது. செங்காந்தள் : ஆகுபெயர். இரண்டாம் அடியில் அகங்கை என்பது அங்கை என நின்றது. நல்லொழுக்கமுடையாராலே காஞ்சிநகரம் போல் விரும்பப்படும் தலைவர் என்க. ஏ: ஈற்றசை.

போர்வயிற்சென்ற தலைவன் நீடத் தலைவி வருந்தல்.

**குறிப்பு :** மருமத்தர் - மார்பினையுடையார். செங்காந்தள் - சிவந்த காந்தட்பூ. அங்கை - அகங்கை. அத்தர் - பாதித்திருமேனியுடையார்; தலைவர். கச்சி - காஞ்சீபுரம். பாங்கர் - பக்கம். கையார் - ஒழுக்கமுடையார், உவர்ப்புறார். வாய்மை - மெய்ம்மை. கதிர்ப்ப - விளங்க. அமர் - போர். அத்தம் - காடு.

**2. என்பங்கம் பங்கம் படச்சூ**
**ழெனிலெங்குஞ் செல்சரணுக்**
**கென்பங்கம் பங்கம் பதித்த**
**பிரான்கச்சி யெய்துவம்வா**
**வென்பங்கம் பங்கம் பிகையுறச்**
**சேர்த்தவ னெம்பெருமான்**
**என்பங்கம் பங்கம் பியாவண்ண**
**மேத்துவ மேழைநெஞ்சே.**

**பதப்பொருள் : என் பங்கம் பங்கம்பட சூழ் எனில்** - எனது பாவம் பின்னமடையும் வண்ணம் பிரதட்சிணம் செய் என்றால்; **எங்கும் செல் சரணுக்கு பங்கு என்** - எவ்விடத்தும் ஓடித்திரியும் பாதங்கட்கு முடம் யாது; **அம்பு அம் கம் பதித்த பிரான் கச்சி எய்துவம்** - அம்பு (ஆதலால்) கங்கையை அழகிய முடியிலேதரித்த திருவேகம்ப நாதருடைய காஞ்சீபுரத்தை (நாம்) அடைவேம்; **வா** - (நீ) வருவாயாக; **என்பு அங்கம் பங்கு அம்பிகை உற**

**சேர்த்தவன்** - (அடைந்து) எலும்புகளை அணிந்த திருமேனியிலே வாமபாகத்தில் உமாதேவியார் தங்கும்வண்ணம் வைத்தவர் என்றும்; **எம்பெருமான் என்பம்** - எமது பெருமான் என்றும் ஓதி; **கம்பம் கம்பியாவண்ணம் ஏத்துவம்** - (அந்நகரத்துள்ள) திருவேகம்பமாகிய ஆலயத்திலே (புகுந்து) சலியாது துதிப்பேம்; **ஏழை நெஞ்சே** - பேதை மனமே என்றவாறு.

மனமே பிரதக்கிணம்செய் என்றால் பாதங்கட்கு முடம் யாது? ஆதலால் காஞ்சீபுரத்தை நாம் அடைவேம்; அடைந்து, வைத்தவர் என்றும் பெருமான் என்றும் துதிப்பேம்; வருவாயாக எனக் கூட்டுக. இறுதியடியில் என்பம்; முற்றெச்சம்.

**குறிப்பு :** பங்கம் - குற்றம், பாவம்; பின்னம். சரண் - பாதம். அம்பு - கங்கை. கம் - முடி. பங்கு - முடம். அங்கம் - திருமேனி. என்பு - எலும்பு. பங்கு - வாமபாகம். கம்பம் - திருவேகம்பம். கம்பியாது - சலியாது.

3. **சேகரந் தோய முடித்தோ**
**யிருள்சிந்தை யார்க்கப்பரி**
**சேகரந் தோயம யார்க்கப்பரி**
**யேகம்ப சேரலர்நஞ்**
**சேகரந் தோயன லாவென்று**
**சிந்தைசெய் யாதமலச்**
**சேகரந் தோயம னாள்வருங்**
**காலையென் செய்குவரே.**

பதப்பொருள் : **சேகரம் தோயம் முடித்தோய்** - திருமுடிக்கண்ணே கங்கையைத்தரித்தவரே ; **இருள் சிந்தையார்க்கு அ பரிசே கரந்தோய்** - இருண்ட மனத்தையுடையவர்களுக்கு அப்படியே ஒளித்தவரே ; **அமலா** - மலமுத்தரே, **கச்சி ஏகம்ப** - காஞ்சீபுரத்தில்

எழுந்தருளியிருக்கும் திருவேகம்பநாதரே ; **சேரலர் நஞ்சே** - அடையாதவர்களுக்கு விஷமாயுள்ளவரே ; **கரம் தோய் அனலா** - கையிலே பொருந்திய அக்கினியை உடையவரே; **என்று சிந்தை செய்யாத மலச்சேகர்** - என்று சிந்தியாத ஆணவ வயிரமுடையவர்கள்; **அந்தோ யமன் ஆள் வரும் காலை என் செய்குவர்** - ஐயோ! இயமதூதர் வருங்காலத்து யாது செய்வார்கள் என்றவாறு.

**குறிப்பு :** சேகரம் - திருமுடி. தோயம் - கங்கை நீர். பரிசு - தன்மை. சேரலர் - அடையாதார். நஞ்சு - விடம். அனல் - தீ. மலச்சேகர் - ஆணவ வயிரமுடையார். யமன் ஆள் - யமதூதர். அமலர் - மலமுத்தர்.

4. **குவலைய மாமை விழியார்**
**மயக்கிற்கொட் கும்புலையேன்**
**குவலைய மாமை யுருவெனக்**
**காலன் குறுகிலென்செய்**
**குவலைய மாமை தருங்கச்சி**
**யேகம்ப கோளரவா**
**குவலைய மாமையி னோடணி**
**யாக்கொண்ட கொள்கையனே.**

பதப்பொருள் : **குவலையம் ஆம் மை விழியார் மயக்கில் கொட்கும் புலையேன்** - கருங்குவளை மலர்போலும் மை அணிந்த கண்களையுடைய பெண்களது மையலிற்பட்டு உழலும் புன்மையேன்; **கு அலைய மாமை உரு என காலன் குறுகில் என் செய்குவல்** - பூமி அலையும்படி பெரிய மேகத்தின் வடிவம்போல இயமன் அணுகில் யாது செய்வேன்; **ஐய** - ஐயரே ; **மாமை தரும் கச்சி ஏகம்ப** - அழகினைப் பொருந்திய காஞ்சீபுரத்தில் வாழும் திருவேகம்பநாதரே ; **கோள் அர வாகு வலையம் ஆமையின் ஓடு அணி ஆ கொண்ட கொள்கையனே** -

வலிய பாம்பைத் தோளணியாகவும் ஆமையின் ஓட்டை மார்பு அணியாகவும் பூண்டருளிய கோட்பாட்டினை உடையவரே என்றவாறு.

மூன்றாம் அடியில் அரார் என்பது அர என நின்றது.

**குறிப்பு :** குவலையம் - கருங்குவளை. மயக்கு - மையல். கொட்கும் - சுழலும். புலையன் - புன்மையன். கு - பூமி. மா - பெரிய. மை - மேகம். உரு - வடிவம். காலன் - இயமன். மாமை - அழகு. கோள் - வலிமை. வாகுவலையம் - தோளணி. கொள்கை - கோட்பாடு.

**5. கைக்கடக் கும்பக் களிறாமை**
**வாயிலுங் கைவசஞ்செய்**
**கைக்கடக் கும்பக்க மேகவொட்**
**டாதெமர் காள்பொன்னுல**
**கைக்கடக் கும்பக்க பூஞ்சினை**
**மாவுறை கம்பன்வெண்ண**
**கைக்கடக் கும்பக் கதிர்முலை**
**பாகனைக் கண்ணுமினே.**

**பதப்பொருள் : கை கடம் கும்பம் களிறு ஆம் ஐ வாயில்** - துதிக்கையையும் மதத்தையும் மத்தகத்தையும் உடைய யானைகளாகிய ஐம்பொறிகளையும்; **உம் கை வசம் செய்கைக்கு** - உங்கள் வசம் ஆக்குதற் பொருட்டு; **பக்கம் ஏக ஒட்டாது அடக்கும்** - பக்கத்திலே செல்ல வொட்டாமல் (அவைகளை) அடக்குங்கள்; **எமர்காள்** - நம்மவர்களே ; **பொன் உலகை கடக்கும் பக்க பூம் சினை மா உறை கம்பன்** - சுவர்க்கலோகத்தைக் கீழ்ப்படுத்து மேற்செல்லும் வகுப்பினவாய பொலிவுபெற்ற கவடுகளையுடைய மாமரத்தடியில் எழுந்தருளியிருக்கும் திருவேகம்பநாதரும்; **வெள் நகை கட கும்ப கதிர் முலை பாகனை கண்ணுமின்** - வெள்ளிய தந்தங்களையும்

குடமாகிய கும்பம்போலும் ஒளிபொருந்திய தனங்களையுமுடைய உமாதேவியாரை வாமபாகத்தே உடையவருமாகிய சிவபிரானைத் தியானியுங்கள் என்றவாறு.

**கதிர்முலை :** அன்மொழித் தொகை. கடக் கும்பக் கதிர் முலை என்பதற்கு யானை மத்தகத்தினையும் கும்பத் தினையும் ஒக்கும் கதிர்த்த முலை என்று பொருள்கூறினும் பொருந்தும்.

**குறிப்பு :** கடம் - மதம். கும்பம் - மத்தகம். களிறு - யானை. ஐவாயில் - ஐம்பொறி. எமர் - நம்மவர். பொன்னுலகு - சுவர்க்கலோகம். சினை - கவடு. நகை - பல். கடம் - கும்பம், குடம். கண்ணுமின் - தியானியுங்கள்.

**6. மின்னலங் காரம்பு பெய்யா**
**துறமிக் கிராசிகடம்**
**மின்னலங் காரக னிற்பினு**
**மென்மின்ன னார்குமின்கு**
**மின்னலங் காரம் பெறநடஞ்**
**செய்வியன் கச்சியைச்சேர்**
**மின்னலங் காரப் பணியான்கம்**
**பந்தொழு வீரன்பரே.**

பதப்பொருள் : **மின்னல் அம் கார் அம்பு பெய்யாது உற** - மின்னலையுடைய அழகிய மேகம் ஜலத்தை வருஷியாவண்ணம்; **இராசிகள் தம்மின் நல் அங்காரகன் மிக்கு நிற்பினும் என்** - (கடக மகர மீனங்கள் அல்லா நிர்ச்சல) இராசிகளில் நல்ல செவ்வாய் காலம் நீட்டித்து நின்றாலும் யாது (இடையூறு நிகழும்); **மின் அனார் குமின் குமின் அலங்காரம் பெற நடம்செய்வியன் கச்சியை சேர்மின்** - மின்போலும் பெண்கள் குமின் குமின் என்னும் ஒலிக்குறிப்போடு அழகு வாய்ப்ப நிருத்தம்

செய்கின்ற பெருமையாகிய காஞ்சீபுரத்தை அடையுங்கள்; **அன்பரே அலங்கு ஆர பணியான் கம்பம் தொழுவீர்** - தொண்டர்களே! அசைகின்ற சர்ப்பாபரணத்தை உடைய சிவபெருமானது திருவேகம்பத்தை வணங்குங்கள் என்றவாறு.

இரண்டாம் அடியில் நல்லங்காரகன் என்பது நலங்காரகன் என லகர ஒற்றுத் தொக்கது.

அன்னார் என்பது அனார் என இடைக்குறைந்து நின்றது. ஏனை அடிகளில் னகர ஒற்றுக்கள் விரிந்து நின்றன.

**குறிப்பு :** கார் - மேகம். அம்பு - நீர். வருஷித்தல் - பெய்தல். அங்காரகன் - செவ்வாய். குமின்குமின் - ஒலிக்குறிப்பு. நடம் - நிருத்தம். அலங்கு - அசைகின்ற. ஆரப்பணி - சர்ப்பாபரணம்.

7. **அன்ப ரவைக்களஞ் செல்லேன்கம்**
**பம்பணி யாதபுலை**
**யன்ப ரவைக்களந் தீமழு**
**வோயென் றரற்றித்துழா**
**யன்ப ரவைக்களந் தன்புசெய்**
**யேன்மெய் யறிவுகுறி**
**யன்ப ரவைக்களங் கத்தேனெவ்**
**வாறருள் கூடுவதே.**

**பதப்பொருள் : அன்பர் அவைக்களம் செல்லேன்** - (யான்) அடியார்களுடைய சபையிலே போகின்றிலேன்; **கம்பம் பணியாத புலையன்** - திருவேகம்பத்தை வணங்காத புன்மையேன்; **பரவை களம் தீ மழுவோய் என்று அரற்றி துழாயன் பரவு ஐக்கு அளந்து அன்பு செய்யேன்** - கடலினின்றும் தோன்றிய விடம் நெருப்பாய்ச் சுடுகின்றது. மழுப்படையையுடையவரே என்று ஒலிட்டுத் துளசிமாலையை அணிந்த விஷ்ணுமூர்த்தி

துதிக்கப் பெற்ற கடவுளாகிய திருவேகம்பநாதருக்கு அளவிட்டாதல் பத்தி செய்கின்றிலேன்; **மெய் அறிவு குறியன்** - உண்மை ஞானத்தைக் கருதுகின்றிலேன்; **பரவை களங்கத்தேன்** - (இங்ஙனம்) பெருங்குற்றத்தை யுடைய அடியேன்; **எ ஆறு அருள் கூடுவது** - எவ்வண்ணம் திருவருள் பெறுவது என்றவாறு.

**குறிப்பு :** அவைக்களம் - சபை. பரவை - கடல். களம் - விடம். அரற்றி - ஒலிட்டு. துழாய் - துளிசிமாலை.

8. தேங்கடி யாரர வார்சடை
யார்திருக் கம்பந்தொழு
தேங்கடி யாரர வந்திகழ்
காஞ்சியிற் சென்றுசிவந்
தேங்கடி யாரர வோசை
செவிமடுத் தேமினிமுந்
தேங்கடி யாரரந் தைப்படுங்
கும்பியிற் செல்வழிக்கே.

**பதப்பொருள் : தேம் கடி ஆர் அரவு ஆர் சடையார் திருக்கம்பம் தொழுதேம்** - தேனையும் மணத்தையும் உடைய ஆத்திமாலையும் பாம்பும் பொருந்திய சடையையுடைய சிவபெருமானது திருவேகம்பத்தை வணங்கினேம்; **கடி ஆர் அரவம் திகழ் காஞ்சியில் சென்று** - கலியாணத்தினது பேரொலி விளங்கும் காஞ்சீபுரத்தில் போய்; **சிவம் தேங்கு அடியார் அர ஓசை செவி மடுத்தேம்** - சிவானந்த வெள்ளம் ததும்பும் உள்ளமுடைய அன்பர்களது அரகர என்னும் முழக்கத்தை இரண்டு காதுகளாலும் உண்ணப்பெற்றேம்; **இனி முந்தேம்** - (ஆதலால்) இனி யாங்கள் முற்பட்ட மாட்டேம்; **கடியார் அரந்தைப்படம் கும்பியில் செல் வழிக்கு** - கொடிய பாவிகள் துன்பப்படும் நரகத்துக்குச் செல்லும் மார்க்கத்தில் என்றவாறு.

வழிக்கு என்பது வேற்றுமை மயக்கம். மார்க்கத்தில் யாங்கள் முற்படமாட்டோம் எனக் கூட்டுக.

**குறிப்பு :** தேம் - தேன். கடி - மணம். ஆர் - ஆத்தி. கடி - கலியாணம். அரவம் - ஒலி, பாம்பு. சிவம் - சிவானந்த வெள்ளம். தேங்கு - ததும்பும்; செவிமடுத்தல் - கேட்டல். கடியார் - கொடிய பாவிகள். அரந்தை - துன்பம்.

9. **கேதனக் கேதனமன்வரி**
**லச்சங் கெடுத்தருள்சங்**
**கேதனக் கேதன வல்லார்**
**மதிகெடக் கட்டியரைக்**
**கேதனக் கேதன மாமுமை**
**பாற்கிளர் வோன்கச்சிநி**
**கேதனக் கேதன வானான்கம்**
**பந்தொழக் கேடிலையே.**

**பதப்பொருள் : கேதன்** - ஒளியையுடையவரும்; **அ கேதநமன்வரில் அச்சம் கெடுத்தருள் சங்கேதன்** - அத்துன்பத்தைச் செய்கின்ற இயமன் வரும் வழி (அடியாருக்குப்) பயத்தைப் போக்கியருளும் நியமத்தையுடைய வரும்; **அக்கு தன வல்லார் மதிகெட அரைக்கு கட்டி** - சங்குமணியை முலைகளாகிய சூதாடு கருவியையுடைய பெண்கள் மனம் அழியும்படி அரையின்கண்ணே அணிந்தவரும்; **தனக்கே தனம் ஆம் உமைபால் கிளர்வோன்** - தமக்கேயுரிய பொருளாகிய உமாதேவியாரிடத்தே மன எழுச்சியுடையவரும்; **கச்சி நிகேதனம் கேதன ஆனான்** - காஞ்சிநகரத்துத் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இடபக்கொடியை உடையவருமாகிய சிவபிரானது; **கம்பம் தொழ கேடு இலை** - திருவேகம்பத்தை வணங்கத் தீங்கில்லையாம் என்றவாறு.

கேது - ஒளி. கட்டி என்பது பெயர். அரைக்கு: வேற்றுமை மயக்கம். ஏ இரண்டும் அசைகள்.

**குறிப்பு :** கேது - ஒளி. கேதம் - துன்பம். சங்கேதம் - நியமம். வல் - சூதாடுகருவி. அக்கு - சங்குமணி. நிகேதனம் - திருக்கோயில். கேதனம் - கொடி. ஆனான் - இடபத்தையுடையான்.

10. **கேட்டை யனாமய மாங்கம்பங்**
**கிட்டவொட் டாதமதன்**
**கேட்டை யனாமயன் மீறச்செய்**
**தீங்கைக் கெடுத்தியெனக்**
**கேட்டை யனாமயங் கேலென**
**வாண்டனன் கேழரியாங்**
**கேட்டை யனாமய னாமறி**
**வாரவன் கீர்த்திகளே.**

பதப்பொருள் : **அனாமயம் ஆம் கம்பம் கிட்ட ஒட்டாத கேட்டை** - நோய் இல்லாததாகிய திருவேகம்பத்தை அணுகவொட்டாத பொல்லாங்கையும்; **மதன் தையல் கேள் நாம் மயல் மீற செய் தீங்கை** - மன்மதன் பெண்கள் உறவால் (விளையும்) அச்சந்தரும் மயக்கத்தை விருத்தி செய்தலால் ஆகும் கேட்டையும்; **கெடுத்தி என கேட்டு** - (நீர்) போக்கியருள்வீராக என்று அடியேன் விண்ணப்பம்செய்யத் திருச்செவிசாத்தி; **ஐயன்** - திருவேகம்பநாதர்; **ஆ மயங்கேல் என ஆண்டனன்** - ஆ மயக்கமுறாதே என்று சொல்லி அடிமைகொண்டருளினர்; **கேழ் அரியாம் கேட்டையன் ஆம் அயனாம் அவன் கீர்த்திகள் அறிவார்** - (கரிய) நிறத்தையுடைய விட்டுணுவாம் இந்திரனாம் பிரமதேவனாம் அப்பெருங்கருணைப்பெருமான் பெரும்புகழ்களை அறியவல்லவர் என்றவாறு.

ஆ: அருளின் கட்குறிப்பு.

**குறிப்பு :** அனாமயம் - நோயின்மை. ஆமயம் - நோய். கிட்ட - அணுக. கேடு - பொல்லாங்கு . தையல் - பெண். கேள் - உறவு. நாம் - அச்சம். கேழ் - நிறம். கேட்டையன் - இந்திரன். அயன் - பிரமதேவன்.

**11. திகழு மலத்தகத் தாளா**
**டொழக்கம்பஞ் சேர்ந்துறைசோ**
**திகழு மலத்தகப் பட்டுழல்**
**குண்டரைச் சேர்த்திடுமூர்த்**
**திகழு மலத்தகத் தெங்கோன்றன்**
**கோன்சிவ ஞானமளித்**
**திகழு மலத்தகட் டாள்வாயென்**
**பார்க்கருள் செய்திடுமே.**

பதப்பொருள் : **திகழும் அலத்தகம் தாளாள் தொழ கம்பம் சேர்ந்து உறை சோதி** - விளங்குகின்ற செம்பஞ்சி ஊட்டிய பாதங்களையுடைய உமாதேவியார் வணங்கத் திருவேகம்பத்திலே பொருந்தி எழுந்தருளியிருக்கின்ற சோதியாகியும்; **கழு மலத்து அகப்பட்டு உழல் குண்டரை சேர்த்திடு மூர்த்தி** - கழுமரத்திலே மும்மலங்களாற் பந்திக்கப்பட்டுச் சுழலும் சமணரை ஏற்றுவித்த மூர்த்தியும்; **கழுமலத்து அகத்து எங்கோன் தன்கோன்** - சீர்காழியின் கண் (அவதரித்த) எங்கள் தலைவருமாகிய ஆளுடையபிள்ளையாருடைய இறைவராகியுமுள்ள சிவபெருமான்; **அத்த சிவஞானம் அளித்திகழுமல் கட்டு ஆள்வாய் என்பார்க்கு அருள் செய்திடும்** - பிதாவே சிவஞானத்தைத் தந்தருளும் துன்பத்தைக் களைந்து அடிமை கொண்டருளும் என்று விண்ணப்பஞ் செய்பவர்களுக்கு (அங்ஙனமே) கருணை செய்வர் என்றவாறு.

**குறிப்பு :** அலத்தகம் - செம்பஞ்சுக்குழம்பு. தாளாள் - தாளையுடைய உமாதேவியார். கழு - கழுமரம். மலம் - ஆணவம். உழல் - சுழலும். குண்டர் - சமணர். கழுமலம் - சீகாழி. கழுமல் - துன்பம். கட்டு - களைந்து.

**12. செய்யவை யம்புயம் வைத்தாளும்**
**வேந்தர் திருவுங்கைப்பச்**
**செய்யவை யம்புய மன்போலு**
**நோக்கியர் தீமையறச்**
**செய்யவை யம்புய மார்கச்சி**
**யேகம்பஞ் சென்றுபத்தி**
**செய்யவை யம்புய னோர்களத்**
**தாயெங்கள் சிற்பரனே.**

**பதப்பொருள் : செய்ய வையம் புயம் வைத்து ஆளும் வேந்தர் திருவும் கைப்ப** - செவ்விதாகிய உலகத்தைத் (தமது) புயத்தில் பொறுத்து ஆளுகின்ற அரசர்களுடைய செல்வமும் உவர்க்கவும்; **செய்ய வை அம்பு யமன்போலும் நோக்கியர் தீமை அற** - சிவந்த கூர்மையாகிய பாணமும் இயமனும் போலும் கண்களையுடைய பெண்களாலாகிய தீங்கு கெடவும்; **செய் அவை அம்புயம் ஆர் கச்சி ஏகம்பம் சென்று பத்திசெய்ய** - கழனிகள்தோறும் தொகுதி தொகுதியாகத் தாமரைகள் நிறைந்த காஞ்சீபுரத்துள்ள (உமது) திருவேகம்பத்திற் போய் அன்பு செய்யவும்; **வை** - கருணை செய்தருளும்; **அம் புயல் நேர் களத்தாய்** - நீருண்ட மேகம்போலும் கரிய கண்டத்தையுடையவரே ; **எங்கள் சிற்பரனே** - எமது ஞானரூபியாகிய பரம்பொருளே என்றவாறு.

**குறிப்பு :** வையம் - உலகம். திரு - செல்வம். வை - கூர்மை. கைப்ப - உவர்க்க. செய் - கழனி. செய்ய -

செவ்விதாகிய, சிவந்த . அம்புயம் - தாமரை. அவை - தொகுதி. பத்தி - அன்பு. புயல் - மேகம். களம் - கண்டம். சிற்பரன் - ஞானரூபியாகிய பரம்பொருள்.

13. பரவாத வந்தனை யன்போல்
வளர்த்துப் படித்துளறும்
பரவாத வந்தனை யந்தோ
விடேனினிப் பார்வெறுந்தா
பரவாத வந்தனை செய்யடி
யார்தம் பணிசெயென்றும்
பரவாத வந்தனை யீந்தனை
யேபழங் கம்பத்தனே.

பதப்பொருள் : **பரவாது அவம் தனையன்போல் வளர்த்து படித்து உளறும பர வாத** - (குரு லிங்க சங்கமங்களை) வழிபாடு செய்யாது பயன்படாத உலக இயல்களைப் புதல்வன்போல விருத்திசெய்து (அவற்றிற்குரிய நூல்களைக்) கற்றுப் பிதற்றுகின்ற மிக்க தருக்கத்தையுடையாய்; **அந்தோ வந்தனை இனி விடேன் பார் வெறும் தாபர ஆத** - ஐயோ வந்து அகப்பட்டாய் இனி விடேம் காண்பாயாக பயனற்ற மரம்போலும் அறிவில்லாதவனே ; **வந்தனை செய் அடியார் தம் பணிசெய் என்று** - (நம்மை) வழிபடும் தொண்டர்களது தொண்டைச் செய்வாயாக என்று சொல்லியருளி; **தவம் தனை ஈந்தனையே** - சிவபுண்ணியத்தைக் கொடுத்தருளினீரன்றே; **அம்பரவா பழம் கம்பத்தனே** - ஞானாகாசமாயுள்ளவரே பழமையாகிய திருவேகம்பவாணரே என்றவாறு.

**குறிப்பு :** அவம் - விண். தனையன் - புதல்வன். உளறும் - பிதற்றுகின்ற. வாதம் - தருக்கம். ஆதன் - அறிவில்லாதவன். பணி - தொண்டு. தவம் - சிவபுண்ணியம். அம்பரம் - ஞானாகாசம்.

14. பத்திக் கணங்கண மாநின்று
போற்றும் பழவடியார்
பத்திக் கணங்கண வேகம்பத்
தாய்பத்து முற்றுகருப்
பத்திக் கணங்கணங் கெய்தலென்
றன்னைபண் பாகியென்னா
பத்திக் கணங்கண பாதவிர்த்
தாண்டருள் பாலிப்பையே.

பதப்பொருள் : **பத்தி கணம் கணமா நின்று போற்றும்** - வரிசையுற்றுக் கூட்டங்கூட்டமாக நின்று துதிக்கும்; **பழ அடியார் பத்திக்கண் அங்கு அணவு ஏகம்பத்தாய்** - பழைய அடியார்களுடைய அன்பினிடத்து அங்கே கலந்தருளும் திருவேகம்பநாதரே ; **பத்தும் முற்று கருப்பத்திக்கு அணங்கு அணங்கு எய்தல் என்று அன்னை பண்பு ஆகி** - பத்துமாதமும் நிறையப் பெற்ற கருப்பவதி பொருட்டுப் பெண்ணே துன்பம் அடையாதே எனச் சொல்லியருளித் தாயுமானவரே ; **கணபா** - கணங்களைக் காப்பவரே ; **என் ஆபத்து இ கணம் தவிர்த்து ஆண்டு அருள் பாலிப்பை ஏ** - அடியேனது துக்கத்தை இப்போதே போக்கி அடிமைகொண்டு கருணை செய்தருளும் என்றவாறு.

அன்னை பண்பாகி என்பது பெயர்.

**குறிப்பு :** பத்தி - வரிசை. கணம் - கூட்டம். அணவு - கலந்தருளும். கருப்பத்தி - கருப்பவதி. அணங்கு - பெண், துன்பம். கணபா - கணங்களைக் காப்பவரே. ஆபத்து - துக்கம். இக்கணம் - இப்போது. பாலிப்பை - செய்தருள்.

15. பாலிக் குமரிக்குந் தாணிழல்
வெப்பம் பணிமொழியால்

**பாலிக் குமரிக்கு மாறுசெய்**
**வார்படிந் தாடிடத்தன்**
**பாலிக் குமரிக் குடிஞைக்கு**
**மெய்தரும் பாக்கியம்கொள்**
**பாலிக் குமரிக்கு வாழ்வான**
**கச்சிப் பதிக்கம்பனே.**

**பதப்பொருள் : *தாள் நிழல் பாலிக்கும்*** - (அடைந்தவர்களுக்குத் தமது) திருவடிநீழலைக் கொடுத்தருளுவர்; ***வெப்பம் அரிக்கும்*** - பிறவி வெம்மையைக் கெடுத்தருளுவர்; **பணி மொழியால்** - மெல்லிய வசனத்தால்; **பால் இக்கு மரிக்குமாறு செய்வார்** - பாலின்சுவையும் கரும்பின் சுவையும் கெடும் வண்ணம் செய்யும் பெண்கள்; **தன்பால் படிந்து ஆடிட** - தன்னிடத்தமைந்து மூழ்கும்பொருட்டு; **இ குமரி குடிஞைக்கும்** - இந்தக் குமரியாற்றுக்கும்; **எய்த அரும் பாக்கியம் கொள்** - பெறுதற்கரிய செல்வம்பெற்ற ; **பாலி குமரிக்கு** - பாலி நதியாகிய கன்னிக்கு; **வாழ்வு ஆன கச்சி பதி கம்பனே** - இடமாகிய காஞ்சீபுரத்து வீற்றிருக்கும் திருவேகம்பநாதரே என்றவாறு.

திருவேகம்பநாதரே திருவடிநீழலைக் கொடுத்தருளுவர்; பிறவி வெம்மையைக் கெடுத்தருளுவர் எனக் கூட்டுக. எய்த அரும் என்பது எய்தரும் என அகரம் தொக்கது.

ஏனை அரிபிரமேந்திராதியரைப் பிரித்து நிற்றலால் இறுதி ஏகாரம் பிரிநிலை.

**குறிப்பு :** பாலிக்கும் - கொடுத்தருளும். அரிக்கும் - கெடுத்தருளும். பணிமொழி - மெல்லிய வசனம். இக்கு - கரும்பு. குமரிக்குடிஞை - குமரியாறு. குடிஞை - ஆறு. பாக்கியம் - செல்வம். பாலி - பாலியாறு. குமரி - கன்னி.

16. பதிகம் பரம்பரர்க் காவது
காஞ்சி பணிபணியென்
பதிகம் பரம்பர சாயுத
மாம்பத்தி செய்பவரேல்
பதிகம் பரம்பர வுந்தொடை
மூவர் பகர்ந்தருளும்
பதிகம் பரம்பர மானந்த
மேயுருப் பார்ப்பவர்க்கே.

பதப்பொருள் : **கம்பர் அம்பரர்க்கு பதி ஆவது காஞ்சி** - திருவேகம்பரும் ஞானகாச ரூபியுமாகிய சிவபெருமானுக்கு நகரமாவது காஞ்சீபுரமாகும்; **பணி பணி என்ப** - ஆபரணமாவது பாம்பாகும் என்று சொல்லுவர்; **அம்பரம் திக்** - ஆடையாவது திக்காகும்; **ஆயுதம் பரசு ஆம்** -படைக்கலமாவது மழுவாகும்; **பத்தி செய்பவர் ஏற்பது இகம் பரம்** - அன்பு செய்வோர் ஏற்றுக் கொள்வது இம்மை மறுமைப் பயனாகும்; **பரவும் தொடை மூவர் பகர்ந்தருளும் பதிகம்** - துதிக்கப்படும் மாலையாவது (திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார் என்னும் மூவர்) முதலிகள் திருவாய்மலர்ந்தருளிய தேவாரப் பதிகமாகும்; **பார்ப்பவர்க்கு உரு பரம் பரமானந்தமே** - (பதிஞானத்தால்) நோக்குவோர்க்குத் திருமேனியாவது மேம்பட்ட பரம சுகவடிவமாகும் என்றவாறு.

**குறிப்பு :** அம்பரர் - ஞானாகாசரூபி. பணி - பாம்பு, ஆபரணம். அம்பரம் - ஆடை. ஆயுதம் - படைக்கலம். பரசு - மழு. இகம் பரம் - இம்மை மறுமை. தொடை - மாலை. உரு - திருமேனி. பரம் - மேம்பட்ட. பரமானந்தம் - பரமசுக வடிவம்.

17. பவன னகன்றலை வன்காஞ்சி
வாழ்பழங் கம்பமெனும்
பவன னகன்றலை ஞாலமெ
லாந்தொழப் பட்டகடம்
பவன னகன்றலை வற்றநெஞ்
சோர்வினைப் பஞ்சினுக்கின்
பவன னகன்றலை மாலைய
னென்றென்று பாடுதுமே.

**பதப்பொருள் : பவன்** - விசுவகாரணர்; **அனகன்** - மலரகிதர்; **தலைவன்** - (எப்பொருட்கும்) இறைவர்; **காஞ்சி வாழ் பழம் கம்பம் என்னும் பவனம்** - காஞ்சீபுரத்தில் இருக்கின்ற பழைய திருவேகம்பம் என்னும் ஆலயத்தையுடையவர்; **தலை அகல் ஞாலம் எல்லாம்** - இடமகன்ற உலகமுழுவதும்; **தொழப்பட்ட கடம்பவனன்** - வழிபடப்பெற்ற கதம்ப வனத்தில் வீற்றிருப்பவர்; **அகன்று அலைவு அற்ற** - பிரிந்து (விடயங்களில்) சுழலுதல் இல்லாத ; **நெஞ்சோர்** - மனத்தையுடைய பரிபக்குவரது; **வினை பஞ்சினுக்கு** - கன்மபாசமாகிய பஞ்சிற்கு; **அனல் நக இன்பன்** - அக்கினிமலை போன்றும் ஆனந்த வடிவாயுள்ளவர்; **தலை மாலையன்** - சிரமாலைகளையுடையவர்; **என்று என்று பாடுதும்** - என்று பலமுறை (சிவபிரானைப்) பாடுவாம் என்றவாறு.

**குறிப்பு :** பவன் - விசுவகாரணர். பவனம் - ஆலயம். ஞாலம் - உலகம். கடம்பவனம் - மதுரை.

18. பாடலம் போது நிறைசிவ
கங்கை படிந்துநித்தம்
பாடலம் போது தொறுமீசன்
கம்பன் பரனெனும்வாய்

பாடலம் போது குழல்விழி
நாலெண் பகுப்பும்வளர்ப்
பாடலம் போதுது மென்னேமெவ்
வாறருள் பற்றுதுமே.

**பதப்பொருள் : பாடலம் போது நிறை** - பாதிரிமலர் நிறைந்த ; **சிவகங்கை நித்தம் படிந்து** - சிவகங்கையிலே நாடோறும் ஸ்நானம் செய்து; **போது தொறும்** - காலந்தோறும்; **ஈசன் கம்பன் பரன் எனும்** - ஈசன் கம்பன் பரன் என்று (ஆன்றோர்) திருவாக்கின் ஆட்சிப்பட்டு வரும்; **வாய்பாடு பாடலம்** - திருநாமங்களை உச்சரிக்கமாட்டேம்; **அல் அம்பு ஓது குழல் விழி** - இருளும் பாணமும் (முறையே) கூறுகின்ற கூந்தலும் கண்களுமாகப் பெற்று; **நால் எண் பகுப்பும் வளர்ப்பாள்** - முப்பத்திரண்டு பிரிவினவாய தருமங்களை விருத்தி செய்கின்ற காமாட்சியம்மையினுடைய ; **தலம் போது தும் என்னேம்** - காஞ்சிநகரத்திற்குச் செல்லுவேம் என்று சொல்லமாட்டேம்; **எவ்வாறு அருள் பற்று தும்** - (இங்ஙனமாயின்) எங்ஙனம் திருவருள் கூடுவாம் என்றவாறு.

சிவபுண்ணியங்களைச் செய்வேம் எனச் சிரத்தையோடு வாக்கால் சொல்லுதலும் செய்தலோடொக்கும் என்பர் தலம் போதுதும் என்னேம் என்றார்.

**குறிப்பு :** பாடலம் - பாதிரி. போது - காலம், மலரும் பருவத்து அரும்பு. அல் - இருள். பாடலம் - உச்சரிக்க மாட்டேம். குழல் கூந்தல். நால் எண் பகுப்பு - முப்பத்திரண்டு பிரிவு. போதுதும் - போவேம்.

19. மேதக ரக்கருந் தேவரும்
யாவரும் வேட்கும்பரி

**மேதக ரக்கரு மன்பருள்**
**வாய்வெண் டரளம்பொன்கோ**
**மேதக ரக்கருந் துன்றிய**
**காஞ்சியின் மிக்ககம்ப**
**மேதக ரக்கருங் கூந்தலு**
**நீயும் விரும்பினையே.**

பதப்பொருள் : **மேதகு அரக்கருந் தேவரும் யாவரும்** - மேன்மைபெற்ற அசுரரும் தேவரும் மாநுடருமாகிய எல்லாரும்; **வேட்கும் பரிமேத** - செய்கின்ற அசுவமேத வேள்விக்குத் தலைவரே ; **கரக்க அரும் அன்பு அருள்வாய்** - ஒளித்தலில்லாத மெய்யன்பை (அடியேனுக்குத்) தந்தருளும்; **வெண் தரளம் பொன் கோமேதக ரக்கரும்** - வெள்ளிய முத்தையும் பொன்னையும் கோமேதக ரத்தினத்தையும் பேணும் வாணிகரும் (ஏனைச்செல்வரும்); **துன்றிய காஞ்சியின்** - நெருங்கிய காஞ்சிநகரத்தில்; **மிக்க கம்பமே** - மேம்பட்ட திரு வேகம்பத்தின்கண்ணே ; **தகர கரு கூந்தலும்** - மயிர்ச் சாந்தினை அணிந்த கரிய அளகத்தையுடைய உமா தேவியாரும்; **நீயும் விரும்பினை** - நீரும் காதலோடு வாழ்ந்திருக்கின்றீர் என்றவாறு.

இரண்டாம் அடியில் கரக்க அரும் என்பது கரக்கரும் என அகரம் தொக்கது. கருங்கூந்தல்: அன்மொழித்தொகை.

**குறிப்பு :** மேதகு - மேன்மைபெற்ற. வேட்கும் - விரும்பும். பரிமேதம் - அசுவமேதம். கரக்க - ஒளிக்க. தரளம் - முத்து.

**20. விரும்பா வலருடம் பாய்மங்கை**
**மார்கொங்கை மெல்லிதழ்க்க**
**விரும்பா வலருடங் கும்படி**
**கேண்மன மேயச்சந்த**

விரும்பா வலருட னார்த்தழை
வேய்ந்தவ மெய்யறிவ
விரும்பா வலருடங் கேத்துகம்
பாவென்று வேண்டுவையே.

பதப்பொருள் : **விரும்பா அலர் உடம்பு ஆய்** - (ஒருவரும்) இச்சியாத பழிமொழிக்கே உடலாகி; **மங்கைமார் கொங்கை** - பெண்களுடைய தனங்களையும்; **மெல் இதழ் கவிரும்** - மென்மை பொருந்திய அதரமாகிய முருக்கம்பூவையும்; **பாவல்** - விரும்பாதே ; **மனமே அருள் தரும்படி கேள்** - நெஞ்சமே திருவருள் பதியும்வண்ணம் (என் சொல்லைக்) கேட்பாயாக ; **அச்சம் தவிரும்** - (சனன) பயம் கெடும்; **பா அலருடன் ஆர் தழை வேய்ந்தவ** - அழகிய மலர்களோடு திருவாத்தித்தளிரும் சூடியவரே ; **மெய் அறிவு அவிரும்** - மெய்ஞ்ஞானம் விளங்குகின்ற ; **பாவலர் உடங்கு ஏத்து** - கவிவாணர்கள் ஒருங்கு துதிக்கும்; **கம்பா என்று வேண்டுவை** - திருவேகம்பநாதரே என்று (துதித்து) வேண்டுவாயாக என்றவாறு.

**குறிப்பு :** அலர் - பழிமொழி. கவிர் - முருக்கம்பூ. பாவல் - விரும்பாதே. அலர் - மலர். ஆர்த்தழை - திருவாத்தித்தளிர். மெய்யறிவு - மெய்ஞ்ஞானம். அவிரும் - விளங்கும். அதரம் - வாயிதழ், கீழுதடு. தவிரும் - கெடும். மனமே! பாவல், கேள், வேண்டுவை என முடிக்க.

21. வையம் பணிசிலை வேதற்குன்
பாலினி வாழியென்றான்
வையம் பணிசிலை தென்காஞ்சி
காற்றனன் மாலென்பறம்
வையம் பணிசிலை வாழிட
மீர்க்குவட் காரைவெல்லும்

வையம் பணிசிலை யேறாகக்
கொண்டு வளர்கம்பனே.

**பதப்பொருள் : வேதற்கு உன்பால்** - பிரமதேவனுக்கு நின்பக்கல்; **இனி சில் பணியை வையம்** - இனிச் சிறிதும் தொழிலை இடமாட்டேம்; **வாழி என்றான்** - (நீ பேரின்பப் பெருவாழ்வு பெற்று) வாழக்கடவாய் என்று சொல்லியருளினார்; **வையம் பணிசிலை தென்காஞ்சி** - பூவியையும் பாம்பையும் மகாமேரு மலையையும் திருக்கச்சி நகரத்தையும்; **காற்று அனல் மால் என்பு அறம்** - வாயுதேவனையும் அக்கினிதேவனையும் விஷ்ணு மூர்த்தியையும் எலும்புகளையும் தருமதேவதையையும்; **(முறையே) வையம் பணி சிலை வாழ் இடம் ஈர்க்கு வட்காரை வெல்லும் வை அம்பு அணி சிலை ஏறாகக்கொண்டு வளர் கம்பன்** - தேரும் ஆபரணமும் வில்லும் வீற்றிருக்கும் தலமும் (அம்பின்) இறகும் பகைவரை வெற்றி கொள்ளத்தக்க (அஸ்திர) நுதியும் பாணமும் மாலையும் முழக்கத்தையுடைய இடபமுமாகக் கொண்டு வாழாநின்ற திருவேகம்பநாதர் என்றவாறு.

திருவேகம்பநாதர் சொல்லியருளினார் எனக் கூட்டுக. முதலடியில் சில் என்பது சிறிது என்னும் பொருள் பட வந்தது. இறுதியடியில் அணி - மாலை.

**குறிப்பு :** வேதன் - பிரமதேவன். பணி - பாம்பு, ஆபரணம், தொழில். வையம் - இடமாட்டோம், பூமி, தேர். சிலை - வில். அறம் - தருமதேவதை. ஈர்க்கு - அம்பின் இறகு. வட்கார் - பகைவர். வை - நுதி. ஏறு - இடபம். அணி - மாலை. சில் - சிறிது.

22. கம்பரந் தாதி நிலம்வலென்
றாதிக ளங்கண்முகங்

கம்பரந் தாதியை கஞ்சமன்
னாள்பங்க னேமுத்தியே
கம்பரந் தாதிருப் பூங்கொன்றை
யோடென்புங் கட்டியென்சொற்
கம்பரந் தாதியுங் கைக்கொண்ட
வாகச்சி காவலனே.

பதப்பொருள் : **கம் பரந்து ஆதி** - ஆகாயத்திலே நிரந்தரமாதலை உடையவரே ; **நிலம் வல் என்று ஆதி** - பிருதிவியிலே கடினமாதலை உடையவரே ; **களம் கண் முகம்** - கழுத்தும் கண்ணும் முகமும்; (முறையே) **கம்பு அரம் தாது இயை கஞ்சம் அன்னாள் பங்கனே** - சங்கையும் அரத்தையும் மகரந்தம் பொருந்திய தாமரை மலரையும் போலாகப்பெற்ற உமாதேவியாரை (வாம) பாகத்தில் வைத்தருளியவரே ; **ஏகம் பரம் முத்தி தா** - ஒன்றாகிய பரமுத்தியைத்தந்தருளும்; **திருபூ கொன்றையோடு என்பும் கட்டி** - அழகிய பொலிவு பெற்ற கொன்றை மாலையுடன் (இழிந்த ) எலும்பு மாலையையும் அணிந்தவரே ; **என் சொல் கம்பர் அந்தாதியும் கைக்கொண்டவா** - (ஆன்றோருடைய பாமாலையுடன்) எளியேனுடைய பாமாலையாகிய இத்திருவேகம்பரந்தாதியையும் அங்கீகரித்தருளியவரே ; **கச்சி காவலனே** - காஞ்சீபுரத்தைக் காப்பவரே என்றவாறு.

பரமுத்தியைத் தந்தருளும் என்பதை இறுதியில் கூறிக்கொள்க.

**குறிப்பு :** கம் - ஆகாயம். பரந்து - பரவி. களம் - கழுத்து. கம்பு - சங்கு. தாது - மகரந்தம். கஞ்சம் - தாமரை. பங்கன் - பாதியையுடையான். ஏகம் - ஒன்று.

23. வலங்கொடி யானத்தன் பாளர்கள்
சூழ்செந்தின் மாநகர்ச்சே

வலங்கொடி யானத்த னாங்காமக்
கோட்டி மணாளனைநா
வலங்கொடி யானத்தன் போலானென்
றேத்தல்செய் வாமினிக்க
வலங்கொடி யானத்தன் மன்வா
தனையை மருவலமே.

பதப்பொருள் : **தியானத்து வலம் கொள்** - திருவடிச் சிந்தனையோடு பிரதட்சிணம் செய்கின்ற ; **அன்பாளர்கள் சூழ்** - மெய்யடியார் சூழ்கின்ற ; **மா செந்தில் நகர்** - பெரிய திருச்செந்தூராகிய திருப்பதியில் (வாழ்கின்ற); **சேவல் அம் கொடியான் அத்தன் ஆம்** - சேவலை (வரைந்த) அழகிய கொடியுடைய முருகக்கடவுளது பிதாவாகிய ; **காமக்கோட்டி மணாளனை** - காமாட்சியம்மைக்குத் தலைவராகிய திருவேகம்பநாதரை ; **நா வலம் கொடியான்** - நாக்கின்கண் உள்ள கொடிபோலும் சரசுவதியையுடைய பிரமதேவரும்; **நத்தன் போலான் என்று** - சங்கையுடைய விஷ்ணு மூர்த்தியுமாய பசுக்கள் போலாத பரமபதி என்று; **ஏத்தல் செய்வோம்** - துதிக்கப்பெற்றேம்; **இனி கவலம்** - இனி வருந்தேம்; **கொடியான் அதன்மன்** - குரூரனாகிய அவ் இமயன்; **வாதனையை மருவலம்** - செய்யும் துன்பத்தை (மனமேயாம்) எய்தமாட்டேம் என்றவாறு.

மூன்றாமடியில் வலம் : ஏழனுருபு.

**குறிப்பு :** தியானம் - சிந்தனை. வலம் - பிரதட்சிணம். காமக்கோட்டி - காமாட்சியம்மை. மன்னன் - கணவன். நாவலம்கொடியான் - பிரமதேவர்: நாவலங்கொடி - சரசுவதி. நத்தன் - திருமால்: நத்து - சங்கு. கொடியாள் - குரூரன். தன்மன் - இயமன். வாதனை - துன்பம். கவலம் - வருந்தமாட்டேம். மருவலம் - எய்தமாட்டேம்.

24. வலமாயக் கண்ட கரளவென்
றேத்திடின் வல்வினைய
வலமாயக் கண்டகத் தேகுடி
கொண்டு மநக்களைய
வலமாயக் கண்டகத் தான்பானு
வாநின்று வாழ்வித்திடும்
வலமாயக் கண்டக ரூரெரித்
தேகம்பம் வாழ்முதலே.

பதப்பொருள் : **வலமாய் அ கரள கண்ட என்று ஏத்திடின்** - (நாம் சிவாலயத்தைப்) பிரதட்சிணம் செய்து அந்நஞ்சை அடக்கிய கழுத்தை உடையவரே என்று துதிக்கின்; **அவலம் வல் வினை மாய கண்டு** - துன்பத்தைத் தருகின்ற வலிய கன்மத்தைக் கெடச்செய்து; **ம ந களைய வலம் ஆ** - மல திரோதங்களை நீக்கவல்லேம் ஆகும்படி; **அகத்தே குடி கொண்டு** - (எமது) நெஞ்சத்தில் வதிந்தருளி; **ய கண் தக தான் பானுவா நின்று** - ஆன்மாக் கண்போலாகத் தாம் ஆதித்தனாக நின்று; **வாழ்வித்திடும்** - (எம்மைத் தம் திருவடிக்கீழ் இருத்தி) வாழச்செய்வர்; **வலம் மாயம் கண்டகர் ஊர் எரித்து** - வெற்றியையும் வஞ்சகத்தையும் உடைய அசுரரது முப்புரத்தையும் தகித்து; **ஏகம்பம் வாழ் முதல்** - திருவேகம்பத்தில் வீற்றிருக்கின்ற முதற்கடவுள் என்றவாறு.

**குறிப்பு :** கரளம் - நஞ்சு. அவலம் - துன்பம். கண்டம் - கழுத்து. வல்வினை - வலிய கன்மம். ம ந - மலதிரோதங்கள். வலம் - வல்லேம். அகம் - நெஞ்சம். வதிந்து - குடிகொண்டு. ய - ஆன்மா. கண் தக - கண் போல். பானு - ஆதித்தன். வலம் - வெற்றி. மாயம் - வஞ்சகம். கண்டகர் - அசுரர். ஊர் - முப்புரம்.

25. முதலையை யாவி கரந்திபங்
காத்தவன் மொய்ம்மலர்த் தாண்
முதலையை யாவி கவானஞ்சு
மாடி முழுமலர்விம்
முதலையை யாவி கமழ்கஞ்ச
னாடவு முற்படுமம்
முதலையை யாவி கலனையென்
னாண்ட முறைகம்பனே.

பதப்பொருள் : **முதலையை ஆவிகரந்து இபம் காத்தவன்** - முதலையை உயிர்கவர்ந்து யானையைக் காத்தவராகிய விஷ்ணுமூர்த்தி; **மொய் மலர் தாள் முதலை (நாடவும்)** - இதழ்கள் செறிந்த தாமரைமலர் போலும் பாதங்களாகிய அடியைத் தேடவும்; **ஐ ஆ இக** - அழகியதாக இப்பூமியிலுள்ள ; **ஆன் அஞ்சும் ஆடி** - பசுக்களது பஞ்சகவ்வியத்தினும் மூழ்கி; **முழுமலர் விம்முதலையை** - சிதையாத அலர்கள் நிறையப்பெற்ற முடியை ; **ஆவி கமழ் கஞ்சன் நாடவும்** - மணம் கமழ்கின்ற செந்தாமரை மலரிலிருக்கும் பிரமதேவர் தேடவும்; **முற்படும் அ முதலை** - கடந்து செல்லும் அந்தத்தலைமைப்பாட்டையுடையீர் (அங்ஙனமாகவும்); **ஐயா** - ஐயரே ; **கம்பனே** - திருவேகம்பநாதரே ; **விகலனை ஆண்ட முறை என்** - அறிவுக் குறைபாடுடைய அடியேனை அடிமைகொண்ட நெறி யாது என்றவாறு.

**குறிப்பு :** ஆவி - உயிர். இபம் - யானை. மொய் - செறிந்த. ஆன் அஞ்சு - பஞ்சகவ்வியம். ஆ - பசு. விம்மு - நிறைந்த. கஞ்சன் - பிரமன்: கஞ்சம் - தாமரை. முதல் - தலைமைப்பாடு. விகலன் - அறிவுக்குறைபாடுடையோன்.

26. பன்னந் தனவண மாக்கோங்கம்
பன்பழை யோனெனும்பேர்

பன்னந் தனவனப் பிற்கழி
வேம்பசுந் தாமரையின்
பன்னந் தனவ்னம் போற்பற்
றேமெப் படிகொல்வெள்ளி
பன்னந் தனவனம் போதனெய்
தாப்பதஞ் சார்வதுவே.

பதப்பொருள் : **பல் நந்தனவனம் ஆக்கேம்** - பலவாகிய பூந்தோட்டங்களை வையேம்; **கம்பன் பழையோன் எனும் பேர் பன்னம்** - திருவேகம்பநாதர் அநாதியே உள்ளவர் என்னும் திருநாமங்களை உச்சரியேம்; **தன வனப்பிற்கு அழிவேம்** - (பெண்களுடைய) முலைகளின் அழகிற்கு அறிவு பறிபோவேம்; **பசும் தாமரையின் பன்னம்** - பசிய தாமரையிலையிலே தங்கிய ; **தன வனம் போல் பற்று அறேம்** - அற்பமாகிய ஜலம்போலப் பற்று ஒழியேம்; **வெள் இபன் நந்தன் அவ் அனம் போதன்** - (இங்ஙனமாகிய நாம்) வெள்ளை யானையையுடைய இந்திரனும் சங்கையுடைய விஷ்ணுமூர்த்தியும் அவ் அன்னவாகனத்தையுடைய பிரமதேவரும்; **எய்தா பதம் சார்வது** - அடையாத பரமுத்தியை அடைவது; **எப்படி கொல்** - எவ்வண்ணம்? என்றவாறு.

மூன்றாம் அடியில் தன்ன என்பது தன என இடைக்குறைந்து நின்றது. கொல் : அசை.

குறிப்பு : நந்தனவனம் - பூந்தோட்டம். பன்னம் - உச்சரியேம். வனப்பு - அழகு. பன்னம் = பர்னம் - இலை. தன்னம் - அற்பம். வனம் - நீர். போதன் - பிரமதேவன்.

27. சாறுவ தீர்த்த நறுநீ
ரிலேகம்பர் தாமுலவுஞ்
சாறுவ தீர்த்தனென் றேத்திடு
மேதியைத் தண்கருப்பஞ்

சாறுவ தீர்த்தலைக் குங்காஞ்சி
காசி கமலைதண்கஞ்
சாறுவ தீர்த்தவொப் பின்பெயர்
நீங்கிடச் சார்மனமே.

பதப்பொருள் : **சாறுவ தீர்த்த நறு நீரில்** - சறுவ தீர்த்தத்தின் மணம் பொருந்திய சலத்திலே ; **ஏகம்பர் தாம் உலவும் சாறு உவ** - திருவேகம்பநாதர் பவனிவருந்தெப்போற்சவத்தைத் (தரிசித்து) மகிழ்வையாக ; **தீர்த்தன் என்று ஏத்திடு** - சுத்தர் என்று (அவரைத்) துதிப்பாயாக ; **மேதியை தண் கருப்பஞ்சாறு அது ஈர்த்து அலைக்கும்** - எருமைகளைக் குளிர்ந்த கருப்பஞ்சாறு இழுத்து அலைக்கின்ற ; **காஞ்சி காசி கமலை தன் கஞ்சாறு** - காஞ்சீபுரம் வாரணாசி திருவாரூர் தண்ணிய கஞ்சாறு (என்னும் தலங்களை); **உ வ தீர்த்த ஒப்பின் பெயர் நீங்கிட சார் மனமே** - உகார வகாரங்களாகிய இரண்டு எழுத்துக்களை நீத்த உவமை என்னும் மையாகிய ஆணவமலம் கெடச் சார்ந்து வசிப்பாயாக நெஞ்சமே என்றவாறு.

**குறிப்பு :** சாறு - உற்சவம். உவத்தல் - மகிழ்தல். உலாவரல் - பவனிவருதல். தீர்த்தன் - சுத்தன். மேதி - எருமை. வாரணாசி - காசி. கமலை - திருவாரூர். மை - ஆணவமலம்.

28. மனவகங் கைக்கனத் தானனற்
போற்றி மறுக்கவெய்யா
மனவகங் கைக்கனற் காரற்கு
மைக்கு மகவைத்தொழ
மனவகங் கைக்கனக் கோனன்பர்
தாடொழ வைத்திகம்ப
மனவகங் கைக்கனத் தார்முத்தஞ்
சேர்கச்சி வானவனே.

பதப்பொருள் : **மன அகம் கை கனத்து ஆனனன் போற்றி** - மனத்தினிடத்தே கையாகிய பாரத்தையுடைய முகத்தினராகிய விநாயகக்கடவுளே வழிபட்டு; **மறுக்க எய்யாமல்** - மீட்டு இளையாமல்; **நவகங்கைக்கு அனற்கு ஆரற்கு உமைக்கு மகவை தொழ** - புதுமையாகிய கங்காதேவிக்கும் அக்கினிதேவனுக்கும் கார்த்திகைப் பெண்கள் அறுவர்க்கும் உமாதேவியாருக்கும் குமாரராகிய முருகக்கடவுளே வணங்கவும்; **மனவ** - சங்குமணியை உடையவரே ; **கம் கை கனக் கோள்** - தலைமாலையாலாகிய அலங்காரத்தையுடைய சீர்மை பொருந்திய இறைவரே ; **அன்பர் தாள் தொழ** - அடியார்களுடைய திருவடிகளை வணங்கவும்; **வைத்தி** - (திருநோக்கம்) செய்தருளும்; **கம்ப மனவ** - திருவே கம்பத்திற்குத் தலைவரே ; **கங்கை** - வரம்பை ; **கனத்து ஆர் முத்தம் சேர்** - மேகத்திலே பொருந்திய முத்துக்கள் சேர்கின்ற ; **கச்சி வானவனே** - காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருக்கும் கடவுளே என்றவாறு.

**குறிப்பு :** கை கனத்து ஆனனன் - விநாயகக்கடவுள்: ஆனனன் - முகம். எய்யாமல் - இளையாமல். மறுக்க - மீட்டு. ஆரல் - கார்த்திகைப் பெண்கள் அறுவர். மகவு - குமாரர். மனவு - சங்குமணி. கம் - தலைமாலை. கங்கு - வரம்பு. கனம் - மேகம்.

**29. வானங் கனைகட லாய்ப்பரந்
தான்வன் கரிகர்க்க
வானங் கனைகட வாநடஞ்
செய்கச்சி வாணன்பொன்னேர்
வானங் கனைகட மாவுரி
யான்கம்ப மாவடிவாழ்
வானங் கனைகட னீதெனக்
காட்டிவந் தாண்டனனே.**

**பதப்பொருள் :** **வானம் கனை கடல் ஆய் பரந்தான்** - ஆகாயமாயும் ஒலிக்கின்ற சமுத்திரமாயும் வியாபித்தவரும்; **வன் கரி கரம் கவான் அங்கனைகள்** - வலிய யானையினது துதிக்கைபோலும் தொடையையுடைய பெண்கள்; **தவா நடம் செய் கச்சி வாணன்** - நீங்காது நிருத்தம் புரிகின்ற காஞ்சீபுரத்து வாழ்கின்றவரும்; **பொன் நேர்வான்** - பொன்போல்பவரும்; **அம் கல் நை கடம் மா உரியான்** - அழகிய மலையும் நையத்தக்க மதம்பொருந்திய யானைத்தோலை உடையவரும்; **கம்பமா அடி வாழ்வான்** - திருவேகம்பமாகிய மாமரத்தடியில் வீற்றிருப்பவரும் ஆகிய சிவபெருமான்; **அங்கு அனை கடன் ஈது என காட்டி வந்து ஆண்டனன்** - அங்கே மாதாவின் முறைமை இஃதென்று அறிவித்து வந்து (அடியேனை) அடிமை கொண்டருளினர் என்றவாறு.

**குறிப்பு :** பரந்தான் - வியாபித்தவர். கரம் - துதிக்கை. கவான் - தொடை. அங்கனை - பெண். தவா - நீங்காது. கடம் மா - யானை. உரி- தோல். அனை - அன்னை.

30. ஆண்டவ னாரணன் கம்பனென்
றேத்த வயன்சுரர்பல்
லாண்டவ னாரண னோடடி
யேனு மணைந்திடிற்பே
ராண்டவ னாரணந் தீசன்
கணங்களிவ் வாலயத்து
ளாண்டவனாரண வுற்றானென்
னாதுள் ளழைத்தருளே.

**பதப்பொருள் :** **ஆண் தவன் ஆரணன் கம்பன் என்று ஏத்த** - ஆடவருள் நாயகரே! வேதார்த்தமாயுள்ளவரே! திருவேகம்பநாதரே! என்று துதிக்கும் பொருட்டு; **அயன் சுரர் பல்லாண்டவன் நாரணனோடு** - பிரமனும்

தேவர்களும் பல்லாண்டையுடைய விஷ்ணுவுமாகிய இவர்களோடு, **அடியேனும் அணைந்திடில்** - அடியேனும் (உமது சந்நிதானத்தை) அடையப் பெற்றால்; **பேர் ஆண்டவன் நார் அண் நந்தீசன் கணங்கள்** - கீர்த்திபெற்றவராகிய அன்பு செறிந்த திருநந்திதேவரும் (அவர் ஆணைவழி ஒழுகும்) சிவகணர்களும்; **இ ஆலயத்துள் ஆண்டு அவன் ஆர் அணவுற்றான் என்னாது** - இத்திருக்கோயிலின் கண்ணே அவ்விடத்தே அவன்யாவன் அணுகினான் என்று சுட்டிப் புறக்கணித்துக் கூறாவண்ணம்; **உள் அழைத்தருள்** - அத்திருவேகம் பத்துள்ளே (அடியேனைக்) கூவியருளும் என்றவாறு.

**குறிப்பு :** அயன் - பிரமன். சுரர் - தேவர். ஆண்தவன் - ஆடவருள் நாயகர். பேர் - கீர்த்தி. நார் - அன்பு. அண் - செறிந்த. கணம் - சிவகணர்.

31. **உள்ளலை வாளை தலைப்படு**
**மோடை யுடுத்தகச்சி**
**யுள்ளலை வாளைநன் னீலஞ்செங்**
**காசுமிழ் கம்பத்தனே**
**யுள்ளலை வாளை யரிக்கண்ணி**
**காம னுகுக்குமம்புக்**
**குள்ளலை வாளைய தார்க்கொன்றை**
**யீந்தவ ளுய்வண்ணமே.**

**பதப்பொருள் : உள்ளலை வாளை தலைப்படும்** - உள்ளலாகிய மீன்களை வாளைமீன்கள் அகப்படுத்துகின்ற ; **ஓடை உடுத்த கச்சியுள்** - வாவிகள் சூழப்பெற்ற காஞ்சி நகரத்துள்ள ; **அலை வாளை நல் நீலம் செம் காசு உமிழ் கம்பத்தனே** - இருளையும் ஒளியையும் நல்ல (மரகத) நீல மணியும் செம்மணியும் உமிழப்பெற்ற திருவேகம்பவாணரே ; **உள்ளலை** - (நீர் திருவுளத்தே)

கருதவில்லை ; **வாள் ஐ அரி கண்ணி** - வாள்போன்ற அழகிய வரிபரந்த கண்களையுடைய இப்பெண்; **காமன் உருக்கும் அம்புக்கு உள் அலைவாள்** - மன்மதன் ஏவும் பஞ்சபாணத்து அகப்பட்டுச் சுழல்வாள் (என்பதை அறிந்துவைத்தும்); **ஐய** - ஐயரே ; **கொன்றை தார் ஈந்து** - கொன்றைமாலையைத் தந்தருளி; **அவள் உய்வண்ணம்** - அப்பெண் பிழைக்கும் முறைமையென்றவாறு.

திருவேகம்பவாணரே! ஐயரே! அறிந்துவைத்தும் பிழைக்கும் முறைமையைக் கருதவில்லை எனக் கூட்டுக. நற்றாயிரங்கல்.

**குறிப்பு :** உள்ளல் - வாளை மீன்வகை. அல் - இருள். வாள் - ஒளி. செங்காசு - செம்மணி. உள்ளலை - கருதவில்லை. அலைவாள் - சுழல்வாள். உருக்கும் - சிந்தும்; ஏவும். வாளைமீன்கள் உள்ளல் மீன்களை அகப்படுத்தும். "வாளைமீன் உள்ளல் தலைப்படல்" என்ற திரிகடுகச் செய்யுள் பகுதியை முதலடி நினைவுபடுத்துகின்றது.

32. வண்ணஞ் சிவந்தவ ரேகம்பர்க்
காா்மொழி வார்மறையின்
வண்ணஞ் சிவந்தவ மானார்பி
ரான்முடி வாழ்மதிக்க
வண்ணஞ் சிவந்தவ மேயீர
வாடிநன் மாமைகெடும்
வண்ணஞ் சிவந்தவ நங்கனுக்
கேங்கி வருந்துவதே.

பதப்பொருள் : **வண்ணம் சிவந்தவர் ஏகம்பர்க்கு ஆர் மொழிவார்** - சிவந்த திருமேனியை உடையாராகிய (அத்) திருவேகம்பநாதருக்கு யாவர் (சென்று) சொல்வார்; **மறையின்வண்ணம் தவம்** - வேதத்தில் (கூறப்படும்) திருவைந்தெழுத்தை (உச்சரித்தலாகிய) சிவபுண்ணிய

முதிர்ச்சியினாலே ; **சிவம் ஆனார்** - (ஒருவாற்றால்) சிவமான அடியார்களுடைய ; **பிரான் முடி வாழ்மதிக்கு** - இறைவரது சென்னிக்கண்ணே வசிக்கும் பிறையின் பொருட்டு; **அவண் அஞ்சி வந்து** - அங்கே (கண்ணுற்றுப்) பயந்து போந்து; **அவமே ஈர வாடி** - வீணாக (மதி) பிளக்கப்பட்டு மெலிந்தும்; **நன் மாமை கெடும் வண்ணம்** - நல்ல அழகு அழியும்படி; **சிவந்த அநங்கனுக்கு** - கோபங்கொண்ட மன்மதன்பொருட்டு; **ஏங்கி வருந்துவது** - அழுதும் என் புதல்வி துன்பம் அடைவதை என்றவாறு.

துன்பம் அடைவதை அத்திருவேகம்பநாதருக்கு யாவர் சொல்வார் எனக்கூட்டுக. இரண்டாம் அடியில் வண்ணம் அக்கரம். நற்றாயிரங்கல்.

**குறிப்பு :** தவம் - சிவபுண்ணியம். சிவம் - சிவமாந்தன்மைப் பெருவாழ்வு. அவம் - வீண். ஈர - பிளக்க. மாமை - அழகு. சிவந்த - கோபித்த. அனங்கன் - மன்மதன். வண்ணம் = வன்னம் - அக்கரம்.

**33. வருந்தலை வாமன னேமதன்**
**சாபம் வணக்கியெய்ய**
**வருந்தலை வாமன னேயய**
**னேமற்றை வானவர்யா**
**வருந்தலை வாமன னேகம்ப**
**னென்னுமெம் மான்கரந்தை**
**வருந்தலை வாமன னேகனு**
**தற்கணை வாழ்த்துதியே.**

**பதப்பொருள் : மனனே வா வருந்தலை** - நெஞ்சமே வருவாயாக வருத்தமுறாதே ; **மதன் சாபம் வணக்கி எய்ய வரும் தலை** - மன்மதன் வில்லை வளைத்து (ப்பாணங்களைத்) தொடுக்கவந்தவிடத்து; **வாமனனே அயனே மற்றை வானவர் யாவரும்** - விஷ்ணுமூர்த்தியும்

பிரமதேவரும் ஏனைத்தேவர்களுமாகிய எல்லோரும்; **தலைவா மனனே கம்பன் என்னும் எம்மான்** - இறைவரே நிலை பெற்றவரே திருவேகம்பநாதரே என்று துதிக்கப்பெற்ற எங்கள் பெருமானும்; **கரம் தைவரும் தலை வாமன்** - திருக்கரத்தில் பரிசிக்கப்பெற்ற பிரம கபாலத்தையுடைய அழகரும்; **அனேகன்** - சர்வான் மாக்களுமானவருமாகிய சிவபிரானது. **நுதல் கணை வாழ்த்துதி** - நெற்றிக்கண்ணைத் துதிப்பாயாக என்றவாறு.

துதிக்கின் அம்மன்மதன் அகலுவன் என்பது எஞ்சிநின்றது. காமம் அங்குரிக்கும் போழ்தே களைதல் வேண்டும் என்பது கருத்து.

**குறிப்பு :** சாபம் - வில். எய்ய - தொடுக்க. தைவரும் - பரிசிக்கும். வாமன் - அழகன். நுதற்கண் - நெற்றிக்கண்.

**34. துதிகா னனந்தலை யேகம்ப**
**வாழ்வையந் தோமிக்கிரந்**
**துதிகா னனந்தலை மூன்றா**
**ளரைத்தொழுந் தேவெனவாழ்த்**
**துதிகா னனந்தலை நீர்த்தடந்**
**தீத்தண்மை சூளையருந்**
**துதிகா னனந்தலை யாம்பதி**
**யென்றெண்ணிச் சூழ்மனனே.**

**பதப்பொருள் : நம் தலை ஏகம்ப வாழ்வை** - நமது முதற் பொருளாகிய திருவேகம்பப் பெருவாழ்வை ; **அந்தோ மிக்கு இரந்து** - ஐயோ பெரிதும் யாசித்து; **கானம் துதி** - பண்ணுடனே துதிப்பாயாக ; **திக் ஆனனம் மூன்று தலை ஆளரை** - நான்கு முகங்களையும் மூன்று சிரசுகளையும் உடைய பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியுமாகிய இருவரையும்; **தொழும் தேவு என வாழ்த்துதி** - வழிபடுகடவுள் என்று கருதிப் புகழ்கின்றாய்;(அங்ஙனம்

புகழ்தலை விட்டொழிந்து) (அடியாராக மதித்தல் வேண்டும் என்றபடி) **கானல் நந்து அலை நீர் தடம்** - பேய்த்தேரைச் சங்குகள் அலைக்கின்ற ஜலத்தையுடைய வாவி என்றும்; **தீ தண்மை** - அங்கியைக் குளிர்ந்த நீர் என்றும்; **சூளை அருந்துதி** - வரைவின் மகளிரைக் (கடவுட் கற்பினையுடைய) அருந்ததி என்றும்; **கான் நனந்தலை ஆம் பதி என்று** - சுடலையை (நாட்டினது) நடுவில் உள்ளதாகிய நகரம் என்றும்; **எண்ணி சூழ் மனனே** - (திரிபாகக்) கருதிச் சுழல்கின்ற நெஞ்சமே என்றவாறு.

நெஞ்சமே இருவரையும் புகழ்தலை விட்டொழிந்து திருவேகம்பப் பெருவாழ்வைத் துதிப்பாயாக எனக்கூட்டுக.

**குறிப்பு :** தலை - முதற்பொருள். கானம் - பண். தேவு - கடவுள். கானல் - பேய்த்தேர். நந்து - சங்கு. தடம் - வாவி. சூள் - வரைவின் மகளிர் : ஆகுபெயர். நனந்தலை - நடுவிடம். கான் - சுடலை.

**35. மனமாலை யாற்ற வலைகடல்**
**வீர மடியநல**
**மனமாலை யாற்ற னலியத்**
**தருமன் மதன்மதச**
**மனமாலை யாற்றண் ணளிசுரந்**
**தாள்கச்சி மாநகர்க்கு**
**மனமாலை யாற்றவ னேகம்ப**
**மேவிய வான்பொருளே.**

**பதப்பொருள் : மனம் மாலை ஆற்ற** - நெஞ்சமானது மயக்கத்தைச் சகிக்கவும்; **அலை கடல் வீரம் மடிய** - திரையை உடைய சமுத்திரத்தினது வலி குன்றவும்; **நலம் மன** - நன்மையானது பொருந்தவும்; **மாலை ஆற்றல் நலிய** - அந்திக்காலத்தினது வலிமை கெடவும்; **தருமன் மதன்**

**மத சமனம்** - இயமனும் மன்மதனும் கொண்ட சினம் சாந்தமுறவும், **மாலையால் தண் அளி சுரந்து ஆள்** - (உமது) மாலையினால் குளிர்ந்த அருள் சுரந்து ஆண்டருளும்; **மா கச்சி நகர்க்கு மன** - பெருமையாகிய காஞ்சீபுரத்திற்குத் தலைவரே ; **மால் ஐயாற்றவனே** - பெருமையாகிய திருவையாற்றை உடையவரே ; **கம்பம் மேவியவான் பொருளே** - திருவேகம்பத்தில் வீற்றிருக்கும் பரம்பொருளே என்றவாறு.

**குறிப்பு :** மால் - மயக்கம். வீரம் - வலி. மன = மன்ன - பொருந்த. மாலை - அந்திக்காலம். தருமன் - இயமன். மதன் - மன்மதன். மத சமனம் - சினம் சாந்தமுறல். அளி - அருள்.

**36. பொருந்தங் குமரிக் குறும்பற்**
**றிருவர் புகழ்சிவந்தாய்**
**பொருந்தங் குமரிக்கு முள்ளே**
**வினையென்று போய்க்கம்பமே**
**பொருந்தங் குமரிக்குங் காறு**
**மமர்பொன்னி சானவிதண்**
**பொருந்தங் குமரிக்கு மேலாங்கம்**
**பைப்புன லாடுநெஞ்சே.**

பதப்பொருள் : **பொரும் தம் குமரி குறும்பு அற்று இருவர் புகழ் சிவம்** - (யான் பரம், யான் பரம் என்று) போர் புரிதற்குக் காரணமாகிய தமது அழிவில்லாத (மலத்தான் ஆகிய) பொல்லாங்கு நீங்கிப் (பிரம விஷ்ணுக்களாகிய) இருவரும் துதிக்கும் பரசிவமானது; **தாய் பொரும்** - மாதாவைப்போலும்; **உள்ளே தங்கும்** - இருதயத்திலே வசித்தருளும்; **வினை அரிக்கும்** - கன்ம பாசத்தைக் கெடுத்தருளும்; **என்று போய்** - என்று (சிந்தித்துச்) சென்று; **கம்பமே பொருந்து** - (அப்பரம் பொருள் சிவலிங்க மூர்த்தங்கொண்டு வாழும்)

திருவேகம்பத்தையே சார்வாயாக ; **அங்கு மரிக்கும் காறும் அமர்** - அங்கே நீ இறக்கும் வரையும் வசிப்பாயாக ; **பொன்னி சானவி தண் பொருந்தம் குமரிக்கு மேலாம் கம்பை புனல் ஆடு** - காவேரி கங்கை குளிர்ச்சிபெற்ற தாமிரபர்ணி கன்னியாநதி முதலிய நதிகளுக்கு மேம்பட்டதாகிய கம்பாநதியினது தீர்த்தத்தில் மூழ்குவாயாக ; **நெஞ்சே** - மனமே என்றவாறு.

மூர்த்தி தலம் தீர்த்தங்களாகிய மும்மைச்சிறப்பும் உள்ள சைவதலங்களில் சிறந்தது காஞ்சி ஆகலின் இவ்வாறு கூறினார் என்க.

**குறிப்பு :** பொரும் - போர்செய்யும். குமரி - அழியாமையையுடைய. குறும்பு - பொல்லாங்கு. பொரும் = பொருவும் - போலும். அரிக்கும் - கெடுக்கும். மரிக்கும்காறும் - இறக்கும்வரையும். ஆடு - மூழ்குக.

**37. சேயரி யம்பக மானே**
**பொருள்வயிற் சென்றவர் தாஞ்**
**சேயரி யம்பக வார்த்திடுங்**
**கார்வரிற் செய்வதென்னாஞ்**
**சேயரி யம்பக வற்கீங்**
**கெனாச்சிறுத் தொண்டர் தந்தஞ்**
**சேயரி யம்பகம் பாவென்றென்**
**றேத்துந் திறனல்லதே.**

**பதப்பொருள் : சேய் அரி அம்பகம் மானே** - சிவந்த வரி பொருந்திய கண்ணையுடைய பெண்ணே ; **பொருள் வயின் சென்றவர் தம் சேயர்** - பொருண்மேல் சென்ற தலைவரானவர் தூர தேயத்தர் ; **இயம் பக ஆர்த்திடும் கார் வரின் நாம் செய்வது என்** - (ஆதலால்) வாச்சியங்கள் பிளவுபட முழங்குகின்ற கார்காலம் வந்தால் யாம் செய்வது யாது; **பகவற்கு சேய் அரியம் ஈங்கு என்னா**

**சிறுத்தொண்டர் தம் தஞ்சே** - (வைரவவேடம் பூண்டு எழுந்தருளிய) கடவுள் பொருட்டுப் புதல்வனை அறுக்க மாட்டேம் இவ்விடத்து என்று மறுத்துக்கூறாத சிறுத்தொண்ட நாயனாரது பற்றுக்கோடாயுள்ளவரே ; **கம்பா** - திருவேகம்பநாதரே ; **என்று ஏத்தும் திறன் அல்லது** - என்று பலமுறை துதிக்கும் தகுதியன்றி என்றவாறு.

வேறு புகலின்று என்பது எஞ்சி நின்றது. கார்காலக் குறிகண்டு தலைவி கவன்று உரைத்தது.

**குறிப்பு :** சேய் - சிவந்த. அம்பகம் - கண். சேயார் - தூரத்திலுள்ளார். இயம் - வாத்தியம். பக - பிளக்க. ஆர்த்திடும் - முழங்கும். கார் - கார்காலம். பகவன் - கடவுள். சேய் - புதல்வன். தஞ்சு - பற்றுக்கோடு.

38. அல்லாக்கு மாரணங் குற்றுயிர்த்
தேங்க மருள்பொறைதை
யல்லாக்கு மாரனன் னாரரு
ளாரென்னு மம்பகலை
யல்லாக்கு மார மடர்கச்சி
கம்ப ரருட்குரிய
னல்லாக்கு மாரனை யீன்பய
னீதென்னு மாயிழையே.

**பதப்பொருள் : அல்லாக்கும்** - துன்பம் உறுவள். **ஆர் அணங்கு உற்று உயிர்த்து ஏங்கும்** - மிக வருத்தம் எய்திப் பெருமூச்செறிந்து அழுவள்; **அருள் பொறை தையல் ஆகுமாரன் அன்னார் அருளார் என்னும்** - கருணையினும் க்ஷமையினும் அழகினும் பசுவும் பூதேவியும் மன்மதனும் போன்ற தலைவர் கருணைசெய்யார் என்று சொல்லுவாள்; **அம்பகலை அல் ஆக்கும் ஆரம் அடர் கச்சி** - (அதற்குக் காரணம்) அழகிய

பகலைச் (சந்திரகிரணம் வீசும்) இரவாச் செய்கின்ற முத்துக்கள் நெருங்கிய காஞ்சீபுரத்தில் வாழும்; **கம்பர் அருட்கு உரியன் அல்லாக் குமாரனை ஈன் பயன் ஈது என்னும்** - திருவேகம்பநாதரது கருணைக்கு உரியவனாகாத புத்திரனைப் பெற்ற பேறாகிய இதுதான் என்றும் சொல்லுவாள்; **ஆய் இழை** - ஆராய்ந்து செய்யப்பட்ட ஆபரணத்தையுடைய தலைவியானவள் என்றவாறு.

புதல்வனொடு புலத்தல்.

**குறிப்பு :** அல்லாக்கும் - துன்பமுறும். அணங்கு - வருத்தம். உயிர்த்து - பெருமூச்செறிந்து. தையல் - அழகு. ஆ - பசு. கு - பூமி. மாரன் - மன்மதன். அல் - இரவு. ஆரம் - முத்து.

39. ஆயா திருக்கச்சி யேகம்ப
நின்னடி யார்க்கடியே
னாயா திருக்கச் சிவமென்ப
தென்றதை யாய்ந்துமற்றொன்
றாயா திருக்கச் சிதானந்த
மாயமர் வண்ணமளி
யாயா திருக்கச் சிதுநீத்
தறிவுரு வாந்திருவே.

**பதப்பொருள் : ஆயா** - (சர்வான்மாக்களுக்கும்) தாயாயுள்ளவரே ; **திரு கச்சி ஏகம்ப** - அழகிய காஞ்சீபுரத்தில் வாழும் திருவேகம்பநாதரே ; **நின் அடியார்க்கு அடியேனாய்** - (நாயினேன்) உமது தொண்டர்க்குத் தொண்டனேன் ஆகி ; **ஆ திருக்கு அ சிவம் என்பது என்று அதை ஆய்ந்து** - ஆன்மாவானது கண்ணும் அகரம் போன்ற சிவமானது சூரியனும் (ஆம் எனச் சிவாகமங்களில் கூறும்) அந்த ஞானபாதப் பொருளை

ஆராய்ச்சி செய்து; **மற்று ஒன்று ஆயாது இருக்க** - வேறொன்றனை ஆராய்ச்சி செய்யாதிருக்கும் வண்ணமும்; **சிதானந்தம் ஆய் அமர் வண்ணம்** - ஞானனந்த வடிவமாய் (நிட்டை பொருந்தி) இருக்கும் வண்ணமும்; **அச்சு திருக்கு இது நீத்து** - சரீரத்தை (யான் எனப் பற்றச் செய்கின்ற மலக்) குற்றமாய இதனைப் போக்கி; **அறிவு உரு ஆம் திரு** - சிவஞான வடிவமாகிய செல்வத்தை ; **அளியாயா** - தந்தருளமாட்டீரா என்றவாறு.

**குறிப்பு :** ஆய் - தாய். ஆ - ஆன்மா. திருக்கு - கண். அ - அகர எழுத்து. சித்ஆனந்தம் - ஞானானந்தம். அச்சு - சரீரம். திருக்கு - குற்றம். அறிவு - சிவஞானம். அளி - கொடு.

40. **திருக்காமக் கோட்ட முதல்விபங்**
**காண்டருள் செல்வன்வினை**
**திருக்காமக் கோட்டம மாற்றிடுங்**
**கம்பன் றிருந்தெழின்மு**
**திருக்காமக் கோட்ட மளித்தானென்**
**றேத்திநந் தீவினைப்பி**
**திருக்காமக் கோட்ட முறும்பாம்**
**பரைக்கசை தேவனையே.**

**பதப்பொருள் : திரு காமக்கோட்ட முதல்வி பங்கு ஆண்டருள் செல்வன்** - அழகிய காமக்கோட்டத்தில் வாழும் காமாட்சியம்மையைப் பாதித் திருமேனியில் வைத்தருளிய செல்வர் என்றும்; **வினை திருக்கு ஆ ம கோள் தமம் மாற்றிடும் கம்பன்** - கன்ம பாசத்தையும் மாயா பாசத்தையும் ஆன்மாவைப் பந்தித்த மலமாகிய வலிய இருளையும் (நமது அடியாருக்குப்) போக்கியருளும் திருவேகம்பநாதர் என்றும்; **திருந்து எழில் முதிருக்கு ஆம் அ கோட்டம் அளித்தான் என்று ஏத்தி** - திருந்திய அழகின் முதிர்ச்சிப் பொருட்டுக் (காஞ்சிநகரத்திற்கு)

நீரையுடைய அந்தத் தடாகங்களைக் கொடுத்தருளினார் என்றும் துதித்து; **நம் தீவினை பிதிர் உக்காம்** - (மனமே) நமது தீவினையாகிய பொடியை உதிர்த்து ஒழித்தேம்; **அக்கு ஒட்டம் உறும் பாம்பு அரைக்கு அசை தேவனை** - சங்கு மணியையும் ஓடும் தொழில் பொருந்திய சர்ப்பத்தையும் அரையின்கண்ணே அணிந்தருளிய கடவுளே என்றவாறு.

மனமே! கடவுளைச் செல்வர் என்றும், திருவேகம்ப நாதர் என்றும், கொடுத்தருளினார் என்றும் துதித்து உதிர்த்தொழித்தேம் எனக் கூட்டுக. இரண்டாம் அடியில் திருக்கு மாயா பாசத்தின் மேற்று, அரைக்கு : வேற்றுமை மயக்கம்.

**குறிப்பு :** காமக்கோட்டம் : கோட்டம் -கோயில்; காமாட்சியம்மையார் எழுந்தருளியிருக்கும் கோயில். பங்கு - பாதி. வினை - கன்மபாசம். திருக்கு - மாயாபாசம். ஆ - ஆன்மா. ம - ஆணவமலம். கோள் - வலிமை. தமம் - இருள். எழில் - அழகு. ஆம் - நீர். கோட்டம் - தடாகம். பிதிர் - பொடி. உக்கு - உதிர்த்து. அக்கு - சங்குமணி : "அக்கரை யார்ப்பர் போலும் ஆவடு துறைய னாரே" என்பது தேவாரம். "கருக்காமக் கோட்டிமிர வினையனைத்தும் ஒருங்கெய்திக் கலகஞ் செய்யும் தருக்காமக் கோட்டியெலா மறவெறிந்தாம்" (காஞ்சிப்புராணம் - கடவுள் - 4)

41. **வனசத் தவன்புர வாள**
**னவன்மதி யம்பசிய**
**வனசத் தவன்புர விப்பக**
**லோனவன் மன்னுசத்த**
**வனசத் தவன்புரம் வென்றோ**
**னவனவ னேநலஞ்சு**

வனசத் தவன்புர வோர்வாழ்
கலிக்கச்சி வாழ்கம்பனே.

பதப்பொருள் : **வனசத்தவன் (அவன்)** - தாமரையாசனராகிய பிரமதேவரும் அவர்; **புரவாளன் அவன்** - காத்தற்றொழில் புரியும் விஷ்ணுவும் அவர்; **மதியம் அவர்** - சந்திரனும் அவர். **பசிய வன சத்த வன் புரவி பகலோன் அவன்** - பச்சை நிறமுள்ள சப்தா என்னும் வலிய குதிரையையுடைய சூரியனும் அவர்; **மன்னு சத்து அவன்** - நிலைபெற்ற சத்துப்பொருளும் அவர்; **அசத்து அவன்** - அசத்துப் பொருளும் அவர்; **புரம் வென்றோன் அவன்** - முப்புரத்தையும் வெற்றி கொண்டவரும் அவர்; **அவனே நல் அஞ்சு வன சத்த அன்பு உரவோர் வாழ் கலிக்கச்சி வாழ் கம்பன்** - அவரே நல்ல ஸ்ரீ பஞ்சாக்கர உச்சாரணத்தையுடைய பத்தி பொருந்திய அறிஞர்கள் வசிக்கும் காஞ்சீபுரத்தில் வாழ்கின்ற திருவேகம்பநாதர் என்றவாறு.

**குறிப்பு :** வனசம் - தாமரை : வனசத்தவன் - பிரமன். புரவாளன் - திருமால் : புரத்தல் - காத்தல். சத்த வன் புரவி - சப்தா என்னும் பச்சைக் குதிரை: ஏழ்குதிரை என்பாரும் உளர். சூரியனை ஏழ்பரித்தேரோன் என்பர். அஞ்சு வன்ன சத்தம் - ஸ்ரீ பஞ்சாக்கர உச்சாரணம். கலி - முழக்கம். பிரமன், திருமால், சந்திரன், சூரியன், சத்து அசத்து, திரிபுராரி எல்லாரும் சிவபிரானே என்பது.

42. கங்கணம் பன்னகஞ் சாந்தமு
நீறு கருதொருபா
கங்கணம் பன்ன கருங்குழன்
மேனி கழுதுகழ
கங்கணம் பன்னக மேகம்ப
மன்ப ரகங்கள்சிரங்

கங்கணம் பன்னக வில்லானுக்
கோதக் கடவனவே.

பதப்பொருள் : **கங்கணம் பன்னகம்** - அஸ்த கடகம் சர்ப்பமும்; **நீறு சாந்தமும்** - விபூதி சந்தனமும்; **கருது ஒரு பாகம் அம்பு அன்ன கண் கரு குழல் மேனி** - (அன்பர்கள்) சிந்திக்கும் ஒருபாகம் பாணம் போலும் கண்களையும் கரிய கூந்தலையுமுடைய உமாதேவியாரது திருமேனியும்; **கழகம் கணம் கழுது** - நிருத்தம் புரியும் இடத்துள்ள கூட்டம் பேய்களும்; **பன் அகம் ஏகம்பம் அன்பர் அகங்கள் சிரம்** - சொல்லப்படும் வீடு திருவேகம்பமும் திருத்தொண்டர்களுடைய இருதயங்களும் வேதசிரசாகிய உபநிடதங்களுமாக ; **கம் கணம் பன் நக வில்லானுக்கு ஓதக்கடவன** - ஆகாயத்துள்ள நட்சத்திரங்கள் நெருங்கிய மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமானுக்குச் சொல்லத் தக்கனவாம் என்றவாறு.

**குறிப்பு :** கங்கணம் - கைக்கடகம். பன்னகம் - பாம்பு. சாந்தம் - சந்தனம். கழகம் - நடனசாலை. கழுது - பேய்.

43. கடவாத வன்ப ருவராத
வன்ப ரகந்தொறுஞ்சங்
கடவாத வன்ப ருவரா
வினையிருட் கார்க்குவன்றோர்
கடவாத வன்ப ருவராலு
கள்கம்பைக் கம்பனலங்
கடவாத வன்ப ருவரா
தளித்தெனைக் காத்தனனே.

பதப்பொருள் : **கடவாத அன்பர்** - (வேத சிவாகமங்களின் விதியினின்றும்) விலகாத மென்தொண்டரும்; **உவராத அன்பர்** - (ஒருபொழுதும்

திருவடியை) வெறுக்காது விதிகடந்தொழுகும் வன்தொண்டரும் ஆகிய திரு அடியார்கள்; **அகம்தொறும்** - நெஞ்சந்தோறும்; **சங்கட வாத வன்பு** - வருத்தமாகிய தருக்கத்தின் வலிமைக்குக் கருவியாகிய மாயாமலமும்; **அருவரா வினை** - (அபரிபக்குவர்) உவர்ப்புறாத கன்ம மலமும்; **இருள் கார்க்கு** - ஆணவமலமுமாகிய அந்த காரத்தை ; **வன் தேர் கடவு ஆதவன்** - (புலரச்செய்யும் வண்ணம்) வலிய வைதிக ரதத்தை நடத்தும் ஞான சூரியனும்; **பரு வரால் உகள்** - பரிய வரால் மச்சங்கள் பாய்கின்ற ; **கம்பை கம்பன்** - கம்பாநதியினாலே சூழப்பட்ட திருவேகம்பத்தில் வாழ்பவரும்; **நலங்கள் தவா தவன்** - (எல்லா) நன்மைகளும் நீங்காது உடையவருமாகிய சிவபெருமான்; **பருவராது அளித்து எனை காத்தனன்** - (பிறவியில் அகப்பட்டுத்) துன்புறாவண்ணம் (இன்ப வீட்டைத்) தந்து அடியேனைக் காத்தருளினர் என்றவாறு.

இரண்டாம் அடியில் வன்பு : ஆகுபெயர்.

**குறிப்பு :** மென்றொண்டர் - விதிப்படி ஒழுகுவோர். வன்றொண்டர் - விதிகடந்தொழுகுவோர். சங்கடம் - வருத்தம். வாதம் - தருக்கம். ஆதவன் - ஞானசூரியன். உகள் - பாயும். கம்பை - கம்பாநதி.

**44.** **தனம்பொடி யாது முளையா**
**தெயிறிந்தத் தையல்கம்பத்**
**தனம்பொடி யாதும் வளராப்**
**பிறைமுடித் தானுக்கென்பா**
**தனம்பொடி யாதுதை சாந்த**
**மெனுங்கொன்றை தந்திடின்ம**
**தனம்பொடி யாதுதை யாதென்னு**
**மென்கட்ட னித்துவந்தே.**

**பதப்பொருள் :** ***தனம் பொடியாது*** - முலை அரும்பாது;

**எயிறு முளையாது** - தந்தம் முளையாது; **இந்த தையல்** - இந்தப் பெண்; **கம்பத்தன்** - திருவேகம்பநாதரும்; **அம்பொடு யாது வளரா பிறை முடித்தானுக்கு** - கங்கையுடன் சிறிதும் விருத்தியில்லாத பிறைமதியைச் சூடியவருமாகிய சிவபிரானுக்கு; **என்பா** - அஸ்திகளோ; **தனம்** - திரவியம்; **பொடியா துதை சாந்தம் எனும்** - திருநீறோ செறிந்த சந்தனம் என்று சொல்லுவாள்; **(அஃதன்றிக்) கொன்றை தந்திடின்** - கொன்றை மாலையைத் தந்தருளினால்; **மதன் அம்பு ஒடியாது தையாது என்னும்** - மன்மதனுடைய பாணங்கள் சிதைந்து தாக்கும் என்றும் சொல்லுவாள்; **என்கண் தனித்து வந்து** - என்னிடத்தே தனித்துவந்து என்றவாறு.

இந்தப் பெண் என்னிடத்தே வந்து சொல்லுவள் எனக்கூட்டுக. சிதைந்து தாக்கும் என்பதற்கு அவமாய்ப்போம் என்பது கருத்து.

தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல்.

**குறிப்பு :** பொடியாது - அரும்பாது. எயிறு - பற்கள். அம்பு - கங்கைநீர். யாதும் - சிறிதும். என்பு - எலும்பு.

**45.** **வந்தனை யாவதுஞ் செய்தறி**
**யாமன மேமறலி**
**வந்தனை யாவது பார்நர**
**கென்னுமுன் வாய்த்திடுத**
**வந்தனை யாவது செய்தார்க்**
**கருண்மயி லூரருப்ப**
**வந்தனை யாவ துலாகம்ப**
**னேயென்று வாழ்த்துவையே.**

பதப்பொருள் : **வந்தனை யாவதும் செய்து அறியாமனமே** - வழிபாடு சிறிதாயினும் புரிந்தறியாத நெஞ்சமே ; **மறலி** - இயமன்; **வந்தனையா அது நரகு**

**பார் என்னும் முன்** - வந்தாயா அந்நரகத்தைப் பார்ப்பாயாக என்று சொல்லும் முன்பே ; **வாய்த்திடு தவம் தனை ஆவது செய்தார்க்கு அருள்** - சிறந்த தவத்தைப் (பயன்) உண்டாகும் வண்ணம் செய்தவர்கட்குக் கருணை செய்கின்ற ; **மயில் ஊர்** - மயிலை நடாத்துகின்ற ; **அருள்பவம் தன் ஐயா** - அருளவதாரத்தையுடைய முருகக்கடவுளுக்குப் பிதாவே. **அதுலா** - ஒப்பில்லாதவரே ; **கம்பனே என்று வாழ்த்துவையே** - திருவேகம்பநாதரே என்று துதிப்பாயாக என்றவாறு.

**குறிப்பு :** வந்தனை - வழிபாடு. யாவதும் - சிறிதும். மறலி - இயமன். பவம் - பிறப்பு. அதுலன் - ஒப்பில்லாதவன்.

46. வைகாத் திருப்பதி நாள்கோள்
வழங்குங் கதிகளென்ற
வைகாத் திருப்பதி கைப்பதி
காசிதன் மார்பமன்றி
வைகாத் திருப்பதி மாற்பேறு
முன்வரைப் பாயினுஞ்செய்
வைகாத் திருப்பதி யான்கச்சி
யேகம்ப மாவடியே.

**பதப்பொருள் : திருவைகாப் பதி** - திருவைகா என்னும் தலமும்; **நாள் கோள் வழங்கும் கதிகள் என்றவை** - நக்ஷத்திரங்களும் கிரகங்களும் செல்கின்ற வேகங்கள் என்பவைகளை ; **கா திருப்பு அதிகைப்பதி** - சோலைகள் (தகைந்து) மீட்கின்ற திருவதிகை என்னும் தலமும்; **காசி** - வாராணசி என்னும் தலமும்; **தன் மார்பம் அன்றி வைகா** - தனது நெஞ்சமன்றி வசியாத ; **திரு பதி மாற்பேறும்** - இலக்குமிதங்கிய திருமாற்பேறு என்னும் தலமும்; **உன் வரைப்பு ஆயினும்** - (திருவேகம்பநாதரே) உம்முடைய க்ஷேத்திரங்களாயிருப்பினும்; **யான் காத்திருப்பது** -

அடியேன் இடையறாது வசிப்பது; **கச்சி ஏகம்பம் மா அடியே** - காஞ்சீபுரத்தில் திருவேகம்பமாகிய மாமரத்தடியே ; **செய்வை** - (ஆதலால்) கருணை புரிந்தருளும் என்றவாறு.

திருவைகா, திருவதிகை, வாராணசி, திருமாற்பேறு என்னும் தலங்களின் பேர் வந்தன.

**குறிப்பு :** கோள் - கிரகம். வரைப்பு - க்ஷேத்திரம். காத்திருப்பது - வசிப்பது. மா - மாமரம்.

**47. மாவடி வாயவ தாரஞ்செ**
**யேகம்ப வாணர்கெடு**
**மாவடி வாயவம் பிஞ்சியி**
**லேவிய மன்னர்புள்ளு**
**மாவடி வாயவர் காணாத**
**ஞான வரோதயர்த**
**மாவடி வாயவந் தீர்சிந்தை**
**யாரெம்மை யாள்பவரே.**

பதப்பொருள் : **மா அடி வாய் அவதாரம் செய் ஏகம்பவாணர்** - மாமரத்தடியிலே சிவலிங்கமூர்த்தம் கொண்டருளிய திருவேகம்பவாணரும்; **கெடுமா** - (அசுரர்கள்) அழியும் வண்ணம்; **வடி வாய அம்பு** - கூரிய நுதியையுடைய பாணத்தை ; **இஞ்சியில் ஏவிய மன்னர்** - மும்மதிலிலே பிரயோகித்த தலைவரும்; **புள்ளு மா வடிவு ஆயவர் காணாத** - அன்னப்பட்சியும் பன்றி மிருகமுமான பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும் அறியாத ; **வர ஞான உதயர் தம்** - பரவுணர்வின் கண்ணே விளங்குகின்றவரும் ஆகிய சிவபிரானுடைய ; **மா அடி வாய்** - பெரிய திருவடி பொருந்திய ; **அவம் தீர் சிந்தையார்** - பயனின்மை நீங்கிய உள்ளத்தையுடைய அடியார்களே ; **எம்மை ஆள்பவர்** - எம்மை அடிமை கொள்பவர்கள் என்றவாறு.

**குறிப்பு :** வடி - கூர்மை. இஞ்சி - மதில். மா - பெரிய. வாய் - பொருந்திய. அவம் - பயனின்மை, வீண்.

48. ஆனந்த வெள்ளம் புயத்தாள்
பணிகம்ப வாணவத்தீ
யானந்த வெள்ள மலவுடற்
பார மறிவுமிகை
யானந்த வெள்ள வதியேனுங்
கன்ம மடா துருப்பட்
டானந்த வெள்ளந் துளைந்தாட
வைத்தி யருமணியே.

**பதப்பொருள் : ஆன் அந்த** - இடபவாகனத்தையுடைய அழகரே ; **வெள் அம்புயத்தாள் பணி கம்ப** - வெண்டாமரைமலரில் இருக்கின்ற சரசுவதி வணங்கும் திருவேகம்பநாதரே ; **ஆணவம் தீ யான் நந்த** - ஆணவமலமாகிய அக்கினியும் யான் என்னும் போதமாகிய தூமமும் கெடவும்; **மல உடல் பாரம் எள்ள** - மலம் நிறைந்த சரீரச்சுமையை இகழ்ந்து கைவிடவும்; **அறிவு மிகையான்** - ஞானமிகுதியினாலே ; **அந்தக் கன்மம் எள் அவதி ஏனும் அடாது** - அக்கன்மமலம் எட்டுணையாயினும் பொருந்தாமலும்; **உருப்பட்டு** - (சுத்த) ரூபம் உடையேனாகி; **ஆனந்த வெள்ளம் துளைந்து ஆட வைத்தி** - இன்பவெள்ளத்தின் மூழ்கி ஆடும் வண்ணம் திருநோக்கம் வைத்தருளும்; **அரு மணியே** - அரிய மாணிக்கம் போல்பவரே என்றவாறு.

ஆணவம் தீயாகக் கூறப்பட்டமைக்கு ஏற்ப, போதம் தூமமாக உரைக்கப்பட்டது.

தற்போத நிகழ்ச்சிக்கு மலம் காரணம் என்பது சிவாகம நூற்றுணிபு. தூமம் - புகை.

**குறிப்பு :** ஆன் - இடபம். அந்தம் - அழகு. வெள்

அம்புயத்தாள் - சரசுவதி; அம்புயம் - தாமரை. எள்ள - இகழ்ந்து தள்ள. எள் அவதி - எட்டுணை. துளைந்து - மூழ்கி. தற்போதம் - யான் என்னும் அகந்தை.

49. மணிகண்ட வாதிரை நாளா
னரன்கம்ப வாணனென்கண்
மணிகண்ட வாதினி தாள்வோன்
றனைப்புத்தர் வாமிகள
மணிகண்ட வாதியை வென்றுண்மை
தேரமன் வியாகரண
மணிகண்ட வாதி விபுதர்க
ணாடொறும் வாழ்த்துமினே.

பதப்பொருள் : ***மணி கண்ட ஆதிரை நாளான்*** - கரிய கண்டத்தையுடைய திருவாதிரை நட்சத்திரத்தினரும்; ***அரன்*** - பாசத்தை அரிப்பவரும்; ***கம்ப வாணன்*** - திருவேகம்பத்தில் வாழ்பவரும்; ***என் கண்மணி*** - அடியேன் கண்மணியாயுள்ளவரும்; ***கண் தவாது*** - அறிவு கெடாமல்; ***இனிது ஆள்வோன் தனை*** - இனிமையாக அடிமைகொள்பவருமாகிய சிவபிரானை ; ***புத்தர் வாமிகள் அமண் நிகண்ட வாதியை வென்று*** - பௌத்தரும் சாத்தேயரும் சமணரும் நிகண்டவாதியரும் ஆகிய சமயிகளைச் செயித்து; ***உண்மை தேர் மன் வியாகரண மணி கண்ட ஆதி விபுதர்கள்*** - தத்துவப் பொருளை ஆராய்தற்குக் கருவியாகிய நிலைபெற்ற இலக்கணமாகிய இரத்தினத்தைக் கைக்கொண்ட தலைமையுள்ள அறிஞர்களே ; ***நாள்தொறும் வாழ்த்துமின்*** - நாடோறும் துதியுங்கள் என்றவாறு.

**குறிப்பு :** மணி - நீலமணி. ஆதிரைநாள் - திருவாதிரை. தவாது - நீங்காமல். உண்மை - தத்துவம். வியா கரணம் - இலக்கணம். விபுதர் - அறிஞர்கள்: அண்மை விளி.

50. வாரா ரிடைமரு மான்றொழ
வேகம்ப மன்னிவளர்
வாரா ரிடைமரு தூரார்
தமதன்பர் மாரருங்கொல்
வாரா ரிடைமரு விப்புகல்
வேனிவ் வருத்தமந்தோ
வாரா ரிடைமரு ளப்பணை
பூண்முலை மாதரசே.

**பதப்பொருள் : வாரார்** - (விரைந்து) வாரார்; **இடைமருமான் தொழ** - இடையர் குலத்தில் பிறந்த கண்ணன் வழிபடும் வண்ணம்; **ஏகம்பம் மன்னி வளர்வார்** - திருவேகம்பத்திலே நிலைபெற்று ஓங்குபவரும்; **ஆர் இடைமருதூரார் தமது அன்பர்** - ஆத்திமாலையை அணிந்த மத்தியார்ச்சுனரும் ஆகிய சிவபிரானுடைய அடியாராகிய தலைவர்; **மாரரும் கொல்வார்** - (ஆதலால்) மன்மதனாரும் கொல்வார்; **அந்தோ இ வருத்தம் ஆரிடை மருவி புகல்வேன்** - ஐயோ! இத்துன்பத்தை யாவரிடத்தே சென்று சொல்வேன்; **இடை மருள** - இடை தளரும் வண்ணம்; **பணை வார் ஆர் பூண் முலை மாதரசே** - பருத்த கச்சுப்பொருந்திய ஆபரணத்தினை அணிந்த தனங்களையுடைய மங்கையர்க்கரசே என்றவாறு.

மங்கையர்க்கரசே! தலைவர் விரைந்து வாரார்; ஆதலால் மன்மதனாரும் கொல்வார்; யாவரிடத்தே சொல்வேன் எனக் கூட்டுக.

தலைவன் நீடத் தலைவி வருந்தல்.

**குறிப்பு :** மருமான் - வழித்தோன்றல். ஆர் - ஆத்தி மாலை. மாரர் - மன்மதனார். மருள - தளர. பணை - பருத்த.

51. மாதேவ னீசர் மொழியாற்
சிறுதெய்வம் வந்தித்துவிம்
மாதேவ னீசதுர் வேதங்க
ளாமன்னு தற்புருடன்
மாதேவ னீச னெனவுரி
யானவ னன்பர்கட
மாதேவ னீசலி யாதுசெய்
யேகம்ப வைப்பிற்சென்றே.

**பதப்பொருள் : மாதே** - பெண்ணே! நீசர் வல் மொழியால் - (புறச்சமயிகளாகிய) கீழ்மக்கள் வலிந்து கூறும் வசனத்தால்; **சிறு தெய்வம் வந்தித்து விம்மாது** - சிறிய தெய்வங்களை வணங்கி ஏங்காது; **ஏவன் நீ** - யாவர் நீ என்று ஆராய்ச்சிசெய்து; **சதுர் வேதங்கள் தாம்** - நான்கு வேதங்களும்; **மன்னு தற்புருடன் மாதேவன் ஈசன் என உரியான்** - நிலைபெற்ற தற்புருடரும் மகா தேவரும் ஈச்சுரரும் என்று சொல்லுதற்கு உரியவராகிய ; **அவன் அன்பர்கள் தமாது ஏவல்** - அச்சிவபிரானுடைய அடியார்களது ஏவற்றொண்டை ; **ஏகம்ப வைப்பில் சென்று** - திருவேகம்பம் என்னும் எல்லையிற் போய் ; **நீ சலியாது செய்** - நீ சலனமின்றிப் புரிவாய் என்றவாறு.

ஈண்டுப் பெண் என்றது ஆன்ம சிற்சத்தியை.

**குறிப்பு :** நீசர் - கீழ்மக்கள். விம்மாது - ஏங்காது. வைப்பு - எல்லை.

52. வைப்பது மத்த முடிமீது
நாடக வர்க்கமெண்சு
வைப்பது மத்தக மேலது
நாட்ட மருவுகம்பம்
வைப்பது மத்த மறுப்பது
பார்வையப் பாகன் வெண்பா

**வைப்பது மத்தனென் றாலென்னை**
**யோநங்கை மால்கொள்வதே.**

**பதப்பொருள் : முடிமீது வைப்பது மத்தம்** - சென்னியின் மேலே தரிப்பது ஊமத்த மலரே ; **எண் சுவைப்பது நாடக வர்க்கம்** - அட்டவித ரசமுள்ளது நிருத்தத்தின் முறைமையே ; **மத்தகம் மேலது நாட்டம்** - நெற்றியின் மீதுள்ளது கண்ணே ; **வைப்பு அது மருவு கம்பம்** - வீற்றிருக்கும் தானமாயுள்ளது பொருந்திய திருவேகம்பமே ; **மத்தம் அறுப்பது பார்வை** - (தமது அடியாருடைய) செருக்கைக் கெடுத்தருள்வது திருநோக்கமே ; **அ பாகன் வெண்பாவை பதுமத்தன் என்றால்** - அந்த வைதிக ரத சாரதி கலைமகள் கணவராகிய பிரமதேவரே என்றால்; **நங்கை மால் கொள்வது என்னையோ** - இப்பெண் (அப்பெற்றியுள்ள திருவேகம்பநாதர் மீது) ஆசைகொண்டு மயங்குவது யாது காரணமோ என்றவாறு.

பாங்கி தலைவி குறிப்பறிதல்.

**குறிப்பு :** மத்தம் - ஊமத்தம்பூ. எண்சுவை - எட்டுச் சுவை. மத்தகம் - நெற்றி. நாட்டம் - கண். மத்தம் - செருக்கு. வெண்பாவை - கலைமகள். மால் - மயக்கம்.

**53. மாலை யடியடி கேண்முனந்**
**தேடவைத் தாய்சமனா**
**மாலை யடியடி யென்னாமற்**
**காத்து வளந்தருபா**
**மாலை யடியடி தோறுஞ்**
**சுவைபெறப் பாடமையின்**
**மாலை யடியடி யோங்கட்**
**கருள்கச்சி வாழ்கம்பனே.**

**பதப்பொருள் : அடிகேள்** - சுவாமிகள்; **ஐ அடி** - அழகிய பாதங்களை ; **முனம் மால் தேட வைத்தாய்** -

முற்காலத்தில் விஷ்ணுமூர்த்தி தேடும் வண்ணம் செய்தவரே ; **சமன்** - இயமன்; **நாம் ஆலை** - அச்சம் பொருந்திய கரும்பாலையிலிட்டு; **அடி அடி என்னாமல் காத்து** - அடி அடி என்னாமல் தடுத்து; **வளம் தரு பா மாலை** - மாட்சிமை பெற்ற பாமாலைகள்; **அடி அடி தோறும்** - அடிகள் தோறும்; **சுவை பெற பாட** - சுவை பொருந்தும்படி பாடும் பொருட்டு; **மை இல் மாலை** - குற்றமில்லாத தன்மையை ; **அடி அடியோங்கட்கு அருள்** - வழி வழி அடியோங்கட்குத் தந்தருளும்; **கச்சி வாழ் கம்பனே** - காஞ்சிநகரத்தில் வாழும் திருவேகம்பநாதரே என்றவாறு.

**குறிப்பு :** சமன் - இயமன். நாம் - அச்சம்.

**54. வாதங் கமண்டல நீரழ**
**லாய்க்கம்ப மன்னிநின்ற**
**வாதங் கமண்டலம் பாயுறி**
**போய்வன் கழுப்பொருந்த**
**வாதங் கமண்டலத் தார்செய்ய**
**வென்றவர் வாழ்த்துமத்தா**
**வாதங் கமண்டல மூன்றுங்**
**கடந்தென் மனத்தகத்தே.**

**பதப்பொருள் : மண் தலம் நீர் அழல் வாதம் கம் ஆய் கம்பம் மன்னி நின்றவா** - பிருதிவி அப்புத் தேயு வாயு ஆகாசம் ஆகிய பஞ்சபூதங்களுமாகித் திருவேகம் பத்தில் நிலைபெற்று வாழ்பவரே ; **தம் கமண்டலம் பாய் உறி போய்** - தங்களுடைய கரகமும் பாயும் தூக்கும் நீக்கி ; **வன் கழு பொருந்த** - வலிய கழுமரத்திலே தூங்கும் வண்ணம்; **அங்கு அமண் தலத்தார் வாது செய்ய** - அம்மதுரைத்தலத்தே ஆருகத சமயக் கூட்டத்தினர் தருக்கம் புரிய ; **வென்றவர் வாழ்த்தும் அத்தா** - (அவர்களை)

வென்ற திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் துதிக்கும் பிதாவே ; **மண்டலம் மூன்றும் கடந்து**- (அங்கி பானு மதி ஆகிய) மண்டலங்கள் மூன்றனையும் பேதித்து; **என் மனத்தகத்து தங்கவா** - அடியேனது நெஞ்சத்தின்கண் இருக்கும் வண்ணம் வந்தருளும் என்றவாறு.

தூங்கும் வண்ணம் வென்ற என்க.

**குறிப்பு :** கமண்டலம் - கரகம், கெண்டி. உறி - தூக்கு. கமு - கமுமரம். கடந்து - பேதித்து.

**55. அகத்திய னாரதன் பூவிற்கு**
**நாசி யரிந்திடுசெய்**
**யகத்திய னார தவத்தியென்**
**னாதறுத் தான்முதலோ**
**ரகத்திய னாரத னாற்றொழுங்**
**கம்ப ரறிவிற்செம்போ**
**தகத்திய னார தமர்க்கொளித்**
**தேமன்றி லாடுவரே.**

பதப்பொருள் : **அகத்தியன்** - அகத்திய முனிவரும்; **நாரதன்** - நாரதமுனிவரும்; **பூவிற்கு நாசி அரிந்திடு செய்ய கத்தியன்** - பூவின்பொருட்டுக் (கழற்சிங்க நாயனாரது தேவியாருடைய) மூக்கை அரிந்த செவ்விய கத்தியையுடைய செருத்துணை நாயனார்; **அ அத்தி ஆரது என்னாது** - (சிவகாமியாண்டாரது திருப்பூங்கூடையைப் பறித்து மலர்களைச் சிதறிய) அந்த யானை யாவருடையது என்று ஆராயாது; **அறுத்தான் முதலோர்** - சேதித்த எறிபத்த நாயனார் முதலாகிய நாயன்மாரும்; **அகத்து இயல்நார் அதனால் தொழும் கம்பர்** - தமது உள்ளத்தமைந்த அன்பினால் வழிபடும் திருவேகம்பநாதர்; **அறிவில் அகத்தி செம்போது அனார்** - (பரிபக்குவருடைய) அறிவிலே செவ்வகத்தியின் சிவந்த

மலர் போல விளங்குவாராகி, **அதமர்க்கு ஒளித்து** - அபக்குவருக்கு மறைந்து; **மன்றில் ஆடுவர்** - கனகசபையிலே திருநிருத்தம் செய்தருளுவர் என்றவாறு.

**குறிப்பு :** அத்தி - யானை. நார் - அன்பு. செவ்வகத்தி மலரைக் கூறியது அரும் பிரயோகம்.

56. ஆடானை யம்பல மேயானைக்
கம்பனை யன்பிலர்பா
லாடானை யம்பல மீவானைக்
கண்டன ளாகிமங்கை
யாடானை யம்பல கொண்டுசென்
றாளங்ங னேநெகிழ்ந்த
தாடானை யம்பலந் தோவெங்கு
மாய தலர்த்திருவே.

பதப்பொருள் : **ஆடானை அம்பலம் மேயானை** - திருவாடானையிலும் சிதம்பரத்திலும் இருப்பவரும்; **அன்பு இலர்பால் ஆடானை** - பத்தியில்லாரிடத்தே பொருந்தாதவரும்; **அம் பலம் ஈவானை** - அழகிய (முத்திப்) பயனைத் தந்தருள்பவருமாகிய ; **கம்பனை** - திருவேகம்பநாதரை ; **கண்டனள் ஆகி மங்கையாள்** - (பவனிவருங்காலத்தே) தரிசித்தவளாகி இப்பேதையானவள்; **தான் பல ஐயம் கொண்டு சென்றாள்** - (அவ்விறைவர் கருணை செய்வரோ செய்யாரோ என்று) நானவித் சந்தேகம் எய்திப்போயினள்; **அங்ஙனே** - அவ்விடத்தே ; **ஆள் தானை நெகிழ்ந்தது** - கட்டிய ஆடையானது அவிழ்ந்தது; **அம்பல் அந்தோ எங்கும் ஆயது** - (அப்பொழுதே) பழி மொழியும் ஐயோ எங்கும் பரந்தது; **அலர்த்திருவே** - செந்தாமரை மலரிலிருக்கும் இலக்குமி போல்பவளே என்றாவறு.

அலரறிவுறுத்தல்.

**குறிப்பு :** அம்பலம் - திருச்சிற்றம்பலம்; சிதம்பரம். ஆடான் - பொருந்தாதவர். பலம் - பயன். தானை - ஆடை. அம்பல் - பழிமொழி. அலர் - செந்தாமரை மலர். திரு - இலக்குமி.

57. திருமேற் றளிவளர் கம்பன்
பனியுந்திண் கோடையுங்கூ
திருமேற் றளியுடன் செய்தவத்
தோர்க்கிறை சீரெழின்மு
திருமேற் றளிமுரல் கொன்றையன்
றாள்சிந்தி யார்சமன
திருமேற் றளிவிட வேறே
துறுதி திருத்துவரே.

**பதப்பொருள் : திருமேற்றளி வளர் கம்பன்** - திருமேற்றளி என்னும் தலத்தில் வாழும் திருவேகம்பநாதரும்; **பனியும் திண் கோடையும் கூதிரும் ஏற்று** - பனியையும் முதுவேனிலின் வெப்பத்தையும் குளிரையும் பொறுத்து; **அளியுடன் செய் தவத்தோர்க்கு இறை** - அன்போடு செய்யும் தவத்தையுடைய முனிவர்கட்குத் தலைவரும்; **சீர் எழில் முதிரும்** - சிறந்த அழகு முதிர்ந்த ; **ஏற்று அளி முரல் கொன்றையன்** - ஆண்வண்டுகள் ஒலிக்கின்ற கொன்றைமாலையை அணிந்தவருமாகிய சிவபிரானுடைய ; **தாள் சிந்தியார்** - திருவடிகளைத் தியானியாதவர்; **சமன் அதிருமேல்** - இயமன் ஆரவாரித்து வந்த இடத்து; **தளிவிட** - விலக்கும் வண்ணம்; **வேறு ஏது உறுதி திருத்துவர்** - வேறே யாது நிச்சயத்தைக் கைக்கொள்வரோ என்றவாறு.

இறுதியடியில் தள்ளி விட எனற்பாலது தளிவிட என இடைக்குறைந்து நின்றது.

**குறிப்பு :** கூதிர் - குளிர். கோடை - முதுவேனில். ஏற்று

அளி - ஆண் வண்டு. முரல் - ஒலிக்கும். சமன் - இயமன். தளிவிட - தள்ளிவிட. உறுதி - நிச்சயம்.

58. திருவோண காந்தன் றளிவள
ரேகம்பன் சீர்க்கருக
திருவோண காந்தன்றன் கோன்வரைப்
பாற்சென்றி யான்முன்கண்ட
திருவோண காந்தனி பேசா
மெனுந்திண் விரதத்தின்மு
திருவோண காந்தம் பிறிதொன்றொவ்
வாணண்பிற் சீரியனே.

பதப்பொருள் : **திருவோண காந்தன் தளி வளர் ஏகம்பன்** - திருவோணகாந்தன்தளி என்னும் திருப்பதியில் வாழும் திருவேகம்பநாதரது; **சீர்க்கு அருக** - புகழைப் பாடுதற்குரிய பாங்கனே ; **திருவோண காந்தன் தன் கோன்** - திருவோண நட்சத்திரத்திற்கு உரிய விஷ்ணு மூர்த்திக்குத் தலைவராகிய அவ்விறைவரது; **வரைப்பால் சென்று** - மலையிடத்தை அடைந்து; **யான் முன்கண்ட திருவோள்** - நாம் முன்பு கண்ட இலக்குமி போன்ற தலைவியானவள்; **நகாம்** - நகைக்க மாட்டேம்; **தனி பேசாம்** - தனிமையாக வசனிக்க மாட்டேம்; **என் திண் விரதத்தின் முதிருவோள்** - என்கிற வலிய நோன்பில் முறுகுபவள்; **நகாந்தம்** - (அன்றிச் சிர முதல்) நகம் இறுதியாக ; **பிறிது ஒன்று ஒவ்வாள்** - மற்றொன்றால் உவமிக்கப்படாள் (அவைகட்கு அவையே ஒப்பு என்றபடி); **நண்பில் சீரியனே** - சிநேகத்தில் சிறந்துள்ளோய் என்றவாறு.

தலைவி இயலிடம் பாங்கற்கு உணர்த்தல்.

**குறிப்பு :** சீர் - புகழ். திருவோணம் - திருமாலுக்கு உரிய நாள். வரை - மாலை, பால்: ஏழனுருபு. திருவோள் -

தலைவி. திரு - இலக்குமி. நக - நகைக்க. விரதம் - நோன்பு. நகாந்தம் : தீர்க்கசந்தி : நக அந்தம்.

**59. அனேகதங் காவத மப்புக**
**ழுக்கம்ப வறுத்தருள்வா**
**யனேகதங் காவதம் பற்பல**
**வோடி யலைந்துவறி**
**யனேகதங் காவதன் பால்வரைப்**
**பாற்றவ மாற்றிக்கச்சி**
**யனேகதங் காவத னேயலை**
**யாவகை நன்னெறியே.**

**பதப்பொருள் : அநேக** - உலகெலாமானவரே ; **அதம புகழ் தங்கா கம்ப** - அதமமாகிய கீர்த்தி பொருந்தாத திருவேகம்ப நாதரே ; **அனே** - மாதாவே ; **கதம் பற்பல காவதம் ஓடி** - வலிமையோடு பல பல காதவழி விரைந்து சென்று; **அலைந்து** - திரிந்து; **வறியன் ஏகு அதம் அறுத்து** - வறியேன் செல்கின்ற அதத்தை நீக்கி; **கா அதன்பால் வரைப்பால்** - சோலையின்கண்ணும் மலையின் கண்ணும் (வசித்து); **தவம் ஆற்றி அலையா வகை** - காமியதவங்களைச் செய்து அலையா வண்ணம்; **நன்னெறி அருள்வாய்** - நன்மார்க்கமாகிய சிவஞானத்தைத் தந்தருளும்; **கச்சி அநேகதங்காவதனே** - கச்சியனேகதங் காவதம் என்னும் தலத்தில் வாழ்பவரே என்றவாறு.

நீக்கித் தந்தருளும் எனக் கூட்டுக.

**குறிப்பு :** கதம் - வலிமை, கோபம். காவதம் - காத தூரம். கா - சோலை. நன்னெறி - சன்மார்க்கம்; சிவஞானம். அனேகன் - அவன் அவள் அது என்று பலவாய் நிற்கத்தக்கவன்.

**60. நெறிக்காரைக் காட்டு குழலார்பின்**
**சென்றுநிற் பீருயிர்போ**

நெறிக்காரைக் காட்டுவிர் கம்பனுக்
காலையி னேர்ந்தநெறு
நெறிக்காரைக் காட்டுப் பள்ளிக்கோ
வுக்கன்பு நிகழ்த்திக்கச்சி
நெறிக்காரைக் காட்டுச் செல்லீர்துனை
யாவரு நீர்மையரே.

பதப்பொருள் : **நெறி காரைக் காட்டு** - நெறிப்பையுடைய மேகத்தைப்போலும்; **குழலார் பின் சென்று நிற்பீர்** - அளகத்தையுடைய பெண்கள் பின்னே போய் நிற்கின்ற மூடர்களே ; **உயிர் போம் நெறிக்கு** - ஆன்மா சரீரத்தை விட்டுப் போம் மார்க்கத்தில்; **ஆரை காட்டு விர்** - யாவரை இலக்காகக் காண்பிப்பீர் (ஆதலால்); **கம்பனுக்கு** - திருவேகம்பநாதரும்; **ஆலையின் நேர்ந்த** - ஆலையில் அகப்பட்ட ; **நெறு நெறு இக்கு ஆர்** - நெறு நெறு என்னும் ஒலியுள்ள கரும்புகள் நிறைந்த ; **ஐ காட்டுப்பள்ளி கோவுக்கு** - அழகிய திருக்காட்டுப் பள்ளி என்னும் தலத்தில் வாழும் இறைவருமாகிய சிவபிரானுக்கு; **அன்பு நிகழ்த்தி** - பத்தி செய்து; **கச்சி நெறிக்காரைக்காட்டு** - கச்சிநெறிக்காரைக்காட்டில்; **துனையா செல்லீர்** - விரைந்து போய் வசியுங்கள்; **அரு நீர்மையரே** - குணமில்லாதவர்களே என்றவாறு.

**குறிப்பு :** நெறி குழலார், காரைக்காட்டு குழலார்: நெறி - நெறிப்பு. கார் - மேகம். குழல் - அளகம். ஆலை - கரும்பை ஆட்டும் இயந்திரம். நெறுநெறு ; ஒலிக்குறிப்பு. இக்கு - கரும்பு. அருநீர்மை - குணமின்மை ; அருமை என்றது இன்மை என்னும் பொருளது. துனை - விரைவு.

61. மையானப் பதிவளர் கச்சிப்
பிரான்வரு மேறெனுந்தன்

மையானப் பதியினை யூர்ந்தரு
ளேகம்ப வாணனிள
மையானப் பதிநன் னிலாநீந்து
வேணி மவுலியன்க
மையானப் பதினைந்து மூவேழு
நீக்க வரந்தருமே.

பதப்பொருள் : **மயானம் பதி வளர் கச்சிப்பிரான்** - திருமயானம் என்னும் தலத்தில் வாழும் காஞ்சிநாதரும், **வரும் தன்ம ஏறு எனும்** - வாராநின்ற தரும நந்தியென்னும்; **யானம் பதியினை ஊர்ந்தருள் ஏகம்ப வாணன்** - தலைமையாகிய வாகனத்தை நடத்தியருளும் திருவேகம்ப வாணரும்; **இளமையான்** - சிறு பருவத்தால்; **அப்பு அதில் நல் நிலா நீந்து** - கங்கையின் கண்ணே நல்ல பிறையானது நீந்தி விளையாடப் பெற்ற ; **வேணி மவுலியன்** - சடைமுடியை உடையவருமாகிய சிவபெருமான்; **கமையான்** - (தமதடிச் சார்ந்தார்க்கு உண்டாகிய) சாந்தம் பற்றி; **அ பதினைந்தும் மூ ஏழும் நீக்க வரம் தரும்** - அம் முப்பத்தாறு தத்துவங்களையும் நேதி செய்யும்படி திருவருள் புரிவர் என்றவாறு.

முதலடி இரண்டாம் அடிகளில் மயானப்பதி, தன்மயானப்பதி என்பன மையானப்பதி தன்மையானப்பதி எனப் போலியாய் வந்தன. தத்துவம் முப்பத்தாறாவன : ஆன்மதத்துவம் - 24, வித்தியா தத்துவம் 7, சிவதத்துவம் 5 என்பன.

**குறிப்பு :** மயானம் - கச்சிமயானம். யானம் - வாகனம். தன்ம ஏறு - தரும வடிவாகிய நந்தி, அப்பு அதில் : அப்பு - நீர்; கங்கையைக் குறித்தது. வேணி - சடை. மவுலி - முடி. கமை - பொறுமை, சாந்தம். பதினைந்தும் மூவேழும் - முப்பத்தாறு தத்துவங்களையும். நேதி - விட்டு நீங்குதல்.

7

62. தருமந் தரதமந் தேர்கல்வி
வேட்டுத் தரையினுருத்
தருமந் தரதமங் கெய்தா
றெனுஞ்சொற் றனைக்கம்பம்வாழ்
தருமந் தரதமர்க் கெட்டார்
வரைதனிற் கைபுயமாந்
தருமந் தரதமக் கூந்தற்கு
நீசென்று சாற்றுகவே.

பதப்பொருள் : **தருமம் தர தமம் தேர்** - புண்ணியங்களிலே தாழ்ச்சி உயர்ச்சிகளை ஆராய்ச்சி செய்தற் கருவியாகிய ; **கல்வி வேட்டு** - வித்தையை விரும்பி; **தரையின் உருத்து** - பூமியிற் பிறந்தும்; **அருமந்த ரதம்** - அருமருந்தன்ன (அக்கல்வி) இன்பத்தை ; **அங்கு எய்தார் எனும் சொல்தனை** - அங்கே அடையாது தாழ்ந்திருக்கின்றார்கள் என்று நீர் சொல்லும் வார்த்தையை ; **கம்பம் வாழ் தரும்** - திருவேகம்பத்தில் வாழும்; **மந்தர் அதமர்க்கு எட்டார்** - (பரிபக்குவராகிய உத்தமர்க்கேயன்றி மற்றை அபரிபக்குவராகிய) மத்திமர் அதமர்க்கு எட்டாத திருவேகம்பநாதரது; **வரைதனில்** - மலையின் கண் (வசிக்கின்ற); **கை புயம் ஆம் தரு மந்தர** - கையும் புயமும் கற்பக தருவும் மந்தரகிரியும் போலப் பெற்ற தலைவரே!; **தம கூந்தற்கு** - இருள்போன்ற கேசத்தையுடைய தலைவிக்கு; **நீ சென்று சாற்றுக** - நீரே போய்ச் சொல்வீராக என்றவாறு.

முதலடியில் உருத்தும் என்னும் உயர்வு சிறப்பு உம்மை விகாரத்தால் தொக்கது.

கல்வி மேற் பிரிவு நீயே கூறென்றல்.

**குறிப்பு :** தமம் - உயர்ச்சி. வேட்டு - விரும்பி. கல்வி கருவியே அன்றிப் பொருளன்று. உருத்து - பிறந்து. ரதம் = ரசம் - இன்பம். தமம் - இருள்.

63. கவளக் கரியன்று வென்றாரன்
பாற்சொன்ன கட்டுரைக்காங்
கவளக் கரியன்று கொல்லாமித்
தெய்வங் கனையிருளாங்
கவளக் கரியன்று தந்தநஞ்
சுண்டிருள் கண்டனென்றா
கவளக் கரியன் றுறைசூழ்கம்
பன்வரைக் காரிகையே.

பதப்பொருள் : **அன்று கவளம் கரி வென்றார்** - அந்நாளிலே கவளத்தை உண்ணும் யானையை வென்ற தலைவரானவர்; **அன்பால் சொன்ன கட்டுரைக்கு** - அன்போடுசொன்ன உறுதிமொழிக்கு; **ஆங்க இ தெய்வம்** - இம்மலையின்கண் வாழும் கடவுள்; **வனம் கரி அன்று கொல் ஆம்** - மாட்சிமை பொருந்திய சாட்சியன்றோ; **கனை இருள் ஆங்கு அ அளக்கர்** - செறிந்த இருள் போன்ற அந்தச் சமுத்திரமானது; **இயன்று தந்த நஞ்சு உண்டு** - (துன்பம்) உற்றுக் கொடுத்த விடத்தை அருந்தி; **இருள் கண்டன்** - கறுத்த மிடற்றையுடைய வரும்; **ஒன்றாக அளக்க அரியன்** - (மற்றைக் கடவுளரில்) ஒருவராக வைத்து எண்ணக்கூடாத மகாதேவருமாகிய ; **துறை சூழ் கம்பன்** - நீர்த்துறைகள் சூழும் திருவேகம்பவாணரது; **வரை காரிகையே** - மலையின் கண் வசிக்கின்ற பெண்ணே! என்றவாறு.

கவளம் - வாயளவு கொண்ட உணவு. ஆங்க : உரையசை. ஆம் : அசை.

தலைவன் நீடத் தலைவி வருந்தல்.

**குறிப்பு :** கரி - கரி = கரத்தையுடையது: யானை, கரியை வென்ற தலைவர் என்றது ஒரு யானை தலைவியைத் துன்புறுத்துவதாக ஓடிவர அதைக்கண்ட வீரன் ஒருவன்

விரைந்துவந்து யானையினின்று அவளைத் தப்புவித்தான். அன்றுமுதல் அவனையே மணக்க வேண்டுமென அவள் உறுதிபூண்டாள். யான் உன்னைப் பிரியேன் என்று அன்று கூறிய அவ்வுறுதிமொழி. கட்டுரை - உறுதிமொழி.

வளம் கரி : கரி - சான்று. அளக்கர் - பாற்கடல். அளக்க - அளவுசெய்ய. காரிகை - பெண்.

**64. காரியங் காரண மாம்பஞ்ச**
**பூதக் கலப்பின்மயங்**
**காரியங் காரணங் கெய்தா**
**வகையருள் காட்டுமவி**
**காரியங் காரணஞ் சூழ்கம்ப**
**னூரல்லுங் காய்பகலுங்**
**காரியங் காரண வோசையைக்**
**காட்டுங் கலிக்கச்சியே.**

பதப்பொருள் : **காரணம் காரியம் ஆம் பஞ்ச பூதக் கலப்பில்** - சூக்குமம தூலங்களாகிய இருதிறத்து ஐம்பூதப் புணர்ச்சியாலாய தேகாதிப் பிரபஞ்சத்தின்; **மயங்கார் இயங்கார்** - மயக்குற்றுச் சரியாத பெரியராயினார்; **அணங்கு எய்தா வகை** - (பிறவிக்கடலுள் அழுந்தி) வருத்தமடையாவண்ணம்; **அருள் காட்டும் அவிகாரி** - (அவர்கட்குத்) திருவருளை விளக்கியருள்கின்ற நிருவி காரியும்; **அங்கு ஆரணம் சூழ் கம்பன் ஊர்** - அங்கே வேதங்கள் (முழங்கிச்) சூழ்கின்ற திருவேகம்பநாதருமாகிய சிவபிரானுடைய தலமாவது; **அல்லும் காய் பகலும்** - இரவினும் வெப்பம் பொருந்திய பகலினும்; **கார் இயம்** - பெருமைபெற்ற வாத்தியங்கள்; **கார் அணவு ஓசையை காட்டும்** - மேகங்களினிடத்தே பொருந்திய முழக்கத்தைப் போலும், **கலிக்கச்சியே** - முழங்குதலையுடைய காஞ்சிநகரமே என்றவாறு.

மயங்கார் : முற்றெச்சம்.

**குறிப்பு :** மயங்கார் - மயங்கி. அவிகாரி - விகாரமில்லாதவர். ஆரணம் - வேதம். அல் - இரவு. கார் - பெருமை. இயம் - வாத்தியம். கார் அணவு: கார் -மேகம். கலி - முழக்கம்.

**65. கச்சித் தெருவில்வந் தார்நெகிழ்த்**
**தாரென் களபமுலைக்**
**கச்சித் தெருளினர் யாவரென்**
**பேற்குக்கல் லாலமர்யோ**
**கச்சித் தெருதினை யூருஞ்செ**
**யுங்கன்னல் கல்லிபந்துய்க்**
**கச்சித் தெருவை யுறுஞ்சூல**
**மேந்திடுங் காணென்பரே.**

**பதப்பொருள் :** ***கச்சித் தெருவில் வந்தார்*** - காஞ்சி நகரத்தினது திருவீதியிலே பவனி வந்தவரும்; ***என் களப முலை கச்சு நெகிழ்த்தார்*** - என்னுடைய சாந்து அணிந்த தனங்களின் கண்ணதாகிய கச்சை அவிழ்த்த வருமாகிய ; ***இ தெருளினர் யாவர் என்பேற்கு*** - இந்தத் தெளிவினையுடையார் எப்பெற்றியர் என்று வினவிய எனக்கு; ***கல்லால் யோகம் அமர் சித்து*** - கல்லால நீழலிலே நிட்டையில் இருந்தருளிய இந்தச் சித்தானது; ***எருதினை ஊரும்*** - இடபத்தை நடத்தும்; ***கல் இபம் கன்னல் துய்க்க சித்து செயும்*** - கல்லானையானது கரும்பினை அருந்தும் வண்ணம் சித்தைச் செய்யும்; ***எருவை உறும் சூலம் ஏந்திடும் காண் என்பர்*** - இரத்தம் பொருந்திய சூலாயுதத்தைத் தரிக்கும் என்று சொல்லுவர் என்றவாறு.

காண் : அசை. திருவேகம்ப நாதர் பவனிவருதலைத் தரிசித்து மால் கொண்டு நிறை அழிந்த மாது சொல்லியது.

**குறிப்பு :** களபம் - கலவைச்சந்தனம். கச்சு - ரவிக்கை ; வார். தெருள் - தெளிவு. என்பேற்கு : வினையாலணையும் பெயர். இபம் - யானை. எருவை - இரத்தம்.

**66. பராரை வரைவரை போல்வளைக்**
**குங்கம் பரைத்திருவம்**
**பராரை வரைவரை யோவறி**
**யார்பன் னெடுங்கணக்கும்**
**பராரை வரைவரை யத்தெரி**
**யார்படித் தோரிற்செம்மாப்**
**பராரை வரைவரை யிட்டொழிப்**
**பாரவ் விதண்டையர்க்கே.**

**பதப்பொருள் : பராரை வரை** - பரிய அரையினையுடைய மேருமலையை ; **வரை போல் வளைக்கும் கம்பரை** - மூங்கில்போல வில்லாக வளைத்த திருவேகம்பநாதரும்; **திருஅம்பராரை** - திரு அம்பர் என்னும் தலத்தையுடைய வருமாகிய கடவுளை ; **வரைவர்** - (இவ்வடிவினரென்று யாவர்) எழுதுவர்; **ஐயோ அறியார்** - ஐயையோ (ஒருவரும்) உணரார்; (இங்ஙனமாகவும்) **பன் நெடுங்கணக்கு உம்பர் ஆர்** - (சிறுவர்கள்) ஓதும் நெடுங்கணக்கின் மேலே பொருந்திய (அகரம் முதல்); **ஐ வரை வரைய தெரியார்** - ஐகாரம் இறுதியாக எழுத அறியாத மூடர்கள்; **படித்தோரின் செம்மாப்பர்** - (உருவம் அருவம் உபயமாகிய வடிவங்களைக் கடந்துள்ள அவ்விறைவரையும் வரையக்) கற்றவர்போல் இறுமாந்திருப்பர்; **அ விதண்டையர்க்கு** - அந்த விதண்டாவாதி கட்கு; **ஐவரை வரையிட்டு ஒழிப்பார் ஆர்** - பஞ்சப் பொறிகளையும் களைந்தொழித்து உண்மை உணர்த்த வல்லவர் யாவர் என்றவாறு.

*விதண்டை - தங்கோட்பாட்டை நிலைநிறுத்தாதகதை.*

**குறிப்பு :** *வரை - மலை, மூங்கில். வரைதல் - எழுதுதல். "இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே" (தேவாரம்). பன்னுதல். சொல்லுதல். செம்மாப்பு - இறுமாப்பு.*

**67. தண்டக நாடக மாடுமெந்**
**தாய்தண் குறங்கரம்பைத்**
**தண்டக நாடக லல்குல்பங்**
**காபொற் றடவரைக்கோ**
**தண்டக நாடக ராதிமண்**
**காற்றங்கி தண்புனலாந்**
**தண்டக நாடகம் வாழ்கம்ப**
**னேநின் சரண்சரணே.**

பதப்பொருள் : **தண்டக நாடகம் ஆடும் எந்தாய்** - *தண்டகம் என்னும் தாண்டவத்தைச் செய்தருளும் எமது பிதாவே ;* **தண் அரம்பை தண்டு குறங்கு** - *குளிர்ச்சி பொருந்திய வாழைத்தண்டு போன்ற தொடையையும்;* **அகல் அல்குல்** - *விசாலமாகிய அல்குலையுமுடைய உமாதேவியார்;* **அகம் நாடு பங்கா** - *திருவுளம் விரும்பப் பெற்ற பாதித்திருமேனியையுடையவரே ;* **பொன் தட வரை கோதண்ட** - *பொன்மயமாயுள்ள பெரிய மேருகிரியாகிய வில்லை உடையவரே ;* **நாள்** - *நட்சத்திரங்களும்;* **தகர் ஆதி** - *மேடம் முதலிய ராசிகளும்;* **மண் தண் புனல் அங்கி காற்று கம் ஆம்** - *பிருதிவியும் குளிர்ந்த அப்புவும் தேயுவும் வாயுவும் ஆகாசமுமாகிய ;* **தண்டகநாடு அகம் வாழ் கம்பனே** - *ஆதொண்டை நாட்டின்கண் வாழும் திருவேகம்பநாதரே ;* **நின் சரணே சரண்** - *உம்முடைய பாதங்களே (அடியேற்குப்) புகலிடமாகும் என்றவாறு.*

**குறிப்பு :** தண்டகம் - தாண்டவ விசேடம். அரம்பை - வாழை. குறங்கு - தொடை. கோதண்டம் - வில். தகர் - ஆடு. தண்டகநாடு - தொண்டைநாடு. சரண் - திருவடி, பற்றுக்கோடு.

**68. சரமைந் தனங்க னொருங்கேவு
முன்கொன்றை தந்திருட்குஞ்
சரமைந் தனங்கண் மெலியச்செய்
யார்பொய்மை சாற்றுபரா
சரமைந் தனங்கண போற்றியென்
றேத்தக்கை தந்தருளீ
சரமைந் தனங்கண் மகிழ்கம்பை
சூழ்கம்பஞ் சார்ந்தவரே.**

பதப்பொருள் : **அனங்கன்** - மன்மதனானவன்; **ஐந்து சரம் ஒருங்கு ஏவும் முன்** - பஞ்சபாணங்களையும் ஒரு சேரப் பிரயோகிக்கும் முன்னரே ; **கொன்றை தந்து** - கொன்றைமாலை தந்தருளி; **அல் இருள் குஞ்சரம் மைந்து** - இராக்காலத்தே அந்தகாரமாகிய யானையின் வலிமையை ; **நம் கண் மெலிய செய்யார்** - நம்மிடத்தே இளைக்கும் வண்ணம் புரியார்; **பொய்மை சாற்று பரா சர மைந்தன்** - (விஷ்ணுவே பரமென்று) அசத்தியங் கூறிய வியாசமுனிவர்; **அங்கண போற்றி என்று ஏத்த** - அருட்கண்ணரே இரட்சிப்பீராக என்று துதித்தமையால்; **கை தந்து அருள் ஈசர்** - (தம்பித்த) கரத்தைக் கொடுத்தருளிய இறைவரும்; **அனங்கள் அமைந்து மகிழ்** - அன்னங்கள் செறிவுற்று இன்பம் எய்தப் பெற்ற ; **கம்பை சூழ் கம்பம் சார்ந்தவர்** - கம்பாநதி சூழ்ந்த திருவேகம்பத்தில் வாழ்பவருமாகிய சிவபெருமான் என்றவாறு.

மாலை விருப்புரைத்தல்.

**குறிப்பு :** *அனங்கன் - மன்மதன். சரம் - அம்பு : தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்பன ஐந்தம்புகள். அந்தகாரம் - இருள்; இருளை மன்மதனுக்கு யானை எனக் கூறுதல் மரபு. பராசரமைந்தன் - பராசரமுனிவருக்கு ஓடம்விடும் வலைச்சியினிடமாகப் பிறந்த வியாச முனிவர்.*

**69. தவந்தானங் காலந் தொறுமற**
**வார்தங்கு கச்சியினெய்**
**தவந்தானங் காலன் றிறல்வாட்டு**
**கம்பன்றன் வெற்பினர்கை**
**தவந்தானங் காலந் தருமென்செய்**
**கேன்சந்தக் குன்றினும்வந்**
**தவந்தானங் காலன்பி லாமதன்**
**றானும் வருத்துவனே.**

பதப்பொருள் : **தவம் தானம் காலம் தொறும் மறவார் தங்கு கச்சியின்** - தவத்தையும் தானத்தையும் காலந்தோறும் மறவாதவர்கள் வசிக்கும் காஞ்சீபுரத்தில்; **எய்த வந்தான்** - அணுகவந்த வழி; **அம் காலன் திறல் வாட்டு** - மேகம் போலும் நிறத்தையுடைய இயமனது வலிமையைக் கெடுத்தருளும்; **கம்பன் தன்வெற்பினர்** - திருவேகம்பநாதரது மலையில் வாழும் தலைவருடைய ; **கைதவம் தான்** - வஞ்சகமானது; **அங்கு ஆலம் தரும்** - (கடலாகிய) அவ்விடத்துப் (பிறந்த) விடம் போலும் (துக்கத்தைக்) கொடுக்கும்; **என் செய்கேன்** - (ஆதலால் யான்) யாது செய்வேன்; (இஃதன்றிச்) **சந்தக் குன்றினும் வந்த வந்தால்** - பொதிய மலையினின்றும் வந்த தென்றற் காற்றினால்; **நம்கால்** - நம்மிடத்து; **அன்பு இலா மதன் தானும்** - இரக்கமில்லாத மன்மதனும்; **வருத்துவன்** - துன்பம் செய்வன் என்றவாறு.

*தலைவன் நீடத் தலைவி வருந்தல்.*

**குறிப்பு :** கைதவம் - வஞ்சகம். ஆலம் - விடம். சந்தக்குன்று - சந்தனமரங்களடர்ந்த பொதியில்மலை. தென்றற்காற்று பொதியில் மலையினின்று வருவது என்றல் மரபு. "தென்றல் வரும் பொழுதெல்லாம் செழுஞ்சாந்தின் மணம் நாறும்" (ஆதிபரு - அருச்சுனன் தீர்த்த - 21). வந்து - காற்று. நம் கால் : கால் : ஏழனுருபு.

70\. வரகந்த மாதன வாழ்வோ
ருணற்குமற் றின்பம்விற்ப
வரகந்த மாதன மாயதென்
னேகம்பர் மைந்தமெய்த்த
வரகந்த மாதன வள்ளிகொண்
காவென்று வாழ்த்தவருள்
வரகந்த மாதன வெற்பாளர்
போலுநம் மன்னவர்க்கே.

**பதப்பொருள் : தன வாழ்வோர்** - பொருட்செல்வ ராயினோர்; **உணற்கு வரகு அந்தமா** - புசித்தற்கு வரகின் அமுது அழகிதாமா; **(அதுபோல) மற்று இன்பம் விற்பர் அகம்** - சுகத்தை விற்கும் பரத்தையர் வீடு; **தம் ஆதனம் ஆயது என்னே** - தம்முடைய ஆசன மாகியது என்ன?; **கம்பர் மைந்த** - திருவேகம்ப நாதர் புதல்வரே ; **மெய்த்த வர** - உண்மையாகிய மேம்பாட்டை யுடையவரே ; **கந்தம் மா தன வள்ளி கொண்கா** - மணம் தங்கிய பெரிய தனங்களையுடைய வள்ளிநாயகி கணவரே ; **என்று வாழ்த்த** - என்று (அடியார்) துதிக்க ; **அருள் வரம்** - கருணைசெய்யா நின்ற வரத்தையுடைய ; **கந்தமாதன வெற்பாளர் போலும்** - கந்தமாதன கிரியில் வாழ்கின்ற முருகக் கடவுள் போன்ற ; **நம் மன்னவர்க்கு** - நமது தலைவர்க்கு என்றவாறு.

தலைவருக்கு ஆசனமாகியது என்னை எனக்கூட்டுக.

மற்று : அசை. அழகு கல்வி அறிவு முதலியவற்றால் சிறந்த தலைவர் என்பாள் 'கந்தமாதன வெற்பாளர் போலும் நம்மன்னவர்' என்றாள்.

பரத்தையிற் பிரிந்த தலைவன் நீடத் தலைவி வருந்தல்.

**குறிப்பு :** அந்தம் - அழகு. வர - மேம்பட்டவரே : விளி. கொண்கர் - கணவர். கந்தமாதனவெற்பு முருகக் கடவுளுக்குரியது.

**71. மன்னா தபோதனர் வாழ்கம்ப**
**வாணநின் வான்கருணை**
**மன்னா தபோதன காபுக**
**லேதென்முன் வந்துதரு**
**மன்னா தபோத தாநர**
**கார வருந்துகென்னா**
**மன்னா தபோதன னரியறி**
**யாதமெய் வாழ்வருளே.**

**பதப்பொருள் : மன்னா** - (எவ்வகைப் பொருட்கும்) இறைவரே ; **தபோதனர் வாழ் கம்ப வாண** - முனிவரர் வசிக்கும் (காஞ்சீபுரத்துள்ள) திருவேகம்பத்தில் வாழபவரே ; **அனகா** - மலரகிதரே ; **நின் வான் கருணை மன்னாத போது** - உமது பேரருள் பதியாத காலத்தே ; **புகல் ஏது** - பற்றுக்கோடு யாது; **என் முன் தருமன் வந்து** - அடியேனுக்கு முன்னே இயமன் வந்து; **ஆத** - அறிவில்லாதவனே ; **போது** - வருவாயாக ; **அனது ஆம் நரகு** - அத்தன்மைத்தாகிய நிரயத்திலே ; **ஆர வருந்துக என்னாமல்** - மிகத்துன்பப் படுவாயாக என்று சொல்லாவண்ணம்; **நாத** - (ஆன்ம) நாயகரே ; **போதன் அரி அறியாத** - பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும் உணராத ; **மெய் வாழ்வு அருள்** - உண்மைவாழ்வைத் தந்தருளும் என்றவாறு.

மலரகிதரே என்பதன் பின்னர் ஆன்ம நாயகரே எனக் கூறிக்கொள்க.

**குறிப்பு :** போது - காலம். புகல் - பற்றுக்கோடு. ஆதர் - அறிவில்லாதவர். நிரயம் - நரகம். ஆர - மிகுதியாக. அனகர் - மலரகிதர்.

**72. வாவிக் கமலத் தடவாளை**
**மாங்கனி வாய்கிழித்து**
**வாவிக் கமலச் சுரைதேக்கி**
**நீந்தும்வண் கச்சிக்கம்பா**
**வாவிக் கமலக்கு நாச்செற்றுக்**
**காலன்வந் தெய்துமுன்ன**
**வாவிக் கமலத் துணைத்தாடந்**
**தாட்கொள வல்விரைந்தே.**

பதப்பொருள் : **வாவி கமலம் தட வாளை** - தடாக நீரிலே வாழும் பெரிய வாளைமீன்களானவை ; **மாங்கனிவாய் வாவி** - மாங்கனிகளிடத்தே பாய்ந்து; **கிழித்து** - (அவற்றைப்) பிளவு செய்து; **கமலம் சுரை தேக்கி நீந்தும்** - (மீண்டு) தாமரை மலரிலே (தங்கிய) தேனை நிறைய உண்டு நீந்துகின்ற ; **வண் கச்சி கம்பா** - மாட்சிமை பெற்ற காஞ்சீபுரத்தில் வாழும் திருவேகம்பநாதரே ; **வா** - வந்தருளும்; **மலக்கு** - (மனத்தை) மயக்கி; **நா செற்று விக்க** - (உரையாடா வண்ணம்) நாவை அடக்கி விக்குதலுண்டாய்; **காலன் வந்து எய்தும் முன்** - இயமன் வந்தடையும் முன்னரே ; **அவாவி** - (திருவுளம்) விரும்பி; **கு** - இப்பூமியின் கண்ணே ; **அமலம் துணை தாள் தந்து** - (உம்முடைய) நிருமலமாகிய உபயபாதங்களையுந்தந்து; **ஆட்கொள வல் விரைந்து** - அடிமை கொள்ளும்வண்ணம் பெரிதும் விரைவாக என்றவாறு.

விரைவாக என்பதன் பின்னர் வந்தருளும் என்னும் பயனிலையைக் கூறிக் கொள்க.

**குறிப்பு :** வாவி - நடாகம். காலன் வருங்கால் மனம் மயங்குதலும். விக்கல் உண்டாதலும் இயல்பு. "... .... அக்கா லரைக்கால்கண் டஞ்சாமுன் - விக்கி, இருமாமுன் ... கச்சி, ஒருமாவின் கீழரையின்றோது" என்ற காளமேகப் புலவர் பாடல் காண்க.

73. **வல்லியங் கோட்டு மலைதிரி**
**கானிருள் வாய்வருவான்**
**வல்லியங் கோட்டுவில் லார்மொழி**
**வார்மலை யீன்றமுலை**
**வல்லியங் கோட்டுநன் னீர்க்கம்பை**
**வாய்த்தழு வக்குழைந்தார்**
**வல்லியங் கோட்டுட னார்த்தெழு**
**மேகம்பம் வாழ்வரைக்கே.**

**பதப்பொருள் : வல்லியம் கோட்டு மலை திரி கான்** - புலிகளும் யானைகளும் சரிக்கின்ற வனத்தின்கண்ணே ; **இருள் வாய் வருவான்** - இராக்காலத்திலே (தாம்) வரும்பொருட்டு; **வல்லி** - பெண்ணே ; **அம் கோட்டு வில்லார் மொழிவார்** - அழகிய வளைத்த வில்லையுடைய த்லைவர் சொல்லுவர்; **மலை ஈன்ற முலை வல்லி** - இமய கிரி பெற்ற தனங்களாகிய சூதாடுகருவிகளை உடைய உமாதேவியார்; **அங்கு ஓட்டு நல் நீர் கம்பைவாய்** - அங்கே ஓட்டம் பொருந்திய நறுநீரையுடைய கம்பா நதிக்கண்ணே ; **தழுவ குழைந்தார்** - தழுவக் குழைந்த திருமேனியையுடைய திருவேகம்பநாதரது; **வல் இயம் கோட்டுடன் ஆர்த்து எழும்** - வலிய வாத்தியங்கள் ஊதுகொம்போடு முழங்கிக் கிளர்கின்ற ; **ஏகம்பம் வாழ் வரைக்கு** - திருவேகம்பம் என்னும் ஆலயம் தங்குதற்கு

இடமாகிய (காஞ்சிநகரத்தைச் சார்ந்த) மலையிடத்தில் என்றவாறு.

மலையிடத்தில் வனத்தின்கண் வரும்பொருட்டுப் பெண்ணே! தலைவர் சொல்லுவர் எனக் கூட்டுக. வரைக்கு : வேற்றுமை மயக்கம்.

இரவரவுரைத்தல்.

**குறிப்பு :** வல்லியம் - புலி. கோடு - ஊதுகொம்பு.

**74. வரையும் வரையுமுள் வாடா**
**திருந்த தடியவர்யா**
**வரையும் வரையுமவ் வேட்டன்பர்**
**பார்த்திவ னாரிவனை**
**வரையும் வரையுமென் னாதெனைச்**
**சேர்த்து வரையுங்கம்பர்**
**வரையும் வரையுந் திடமுமுள்**
**ளார்தந்த மாந்தழையே.**

**பதப்பொருள் : வரையும் வரையும்** - மணம் புணர்த்துங் காறும்; **உள் வாடாதிருந்தது** - உள்ளீரம் உலர்ந்து புலராதிருந்தது; **அடியவர் யாவரையும்** - தொண்டர் எல்லாரையும்; **அவ் ஏட்டு அன்பர் பார்த்து** - எழுதும் அந்த லேக்கபத்தர் நோக்கி; **இவன் ஆர்** - இவன் யாவன்; **இவனை வரையும் வரையும் என்னாது** - இவனைத் தள்ளும் தள்ளும் என்று சொல்லாது; **எனை சேர்த்து வரையும் கம்பர்** - அடியேனையும் கூட்டி எழுதுவிக்கும் திருவேகம்பநாதரது; **வரையும் வரை உந்து இடமும் உள்ளார்** - மலையினும் மூங்கில் செறிந்த இடத்தினும் வாழும் தலைவர்; **தந்த மாந்தழை** - நல்கிய மாந்தளிரானது என்றவாறு.

மாந்தளிரானது புலராதிருந்தது எனக் கூட்டுக. மூன்றாமடி இறுதியில் வரைவிக்கும் எனற்பாலது வரையும் என விவ்விகுதி தொக்கு நின்றது.

*தலைநயப்புரைத்தல்.*

**குறிப்பு :** வரையும் வரையும் : நயம் காண்க. வரைதல் - மணந்துகொளல். வரை - எல்லை, அளவு. தொண்டர்களை எழுதும் கணக்கு : "எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்ப ரீசனே" (தேவாரம்). வரை - மூங்கில், மலை.

'வரைதலே கொள்ளல் நீக்கல்' : இங்கே மூன்றாமடியிலே வரையும் - தள்ளும் என்ற பொருளினும், 'வரையும் கம்பர்' . என்ற தொடரில் எழுதும் - (எழுதுவிக்கும்) என்ற பொருளினும் வந்தமை காண்க : வரையும் வரையும் : அடுக்கு. ஏட்டன்பர் - இராயசவேலை பார்ப்போர்.

**75. மாந்தரு மங்கல வாவிட**
**மாந்தியவ் வானவரு**
**மாந்தரு மங்கல ரிட்டேத்த**
**வாழ்கம்ப வாணனொற்றை**
**மாந்தரு மங்கல வைப்பாக்கொண்**
**டானடி வாழ்த்துபுவிம்**
**மாந்தரு மங்கல மாகக்கொள்**
**ளாம்வம்பின் மாழ்குதுமே.**

**பதப்பொருள் : மாந்த அரும்** - (பிற தேவரால்) அருந்துதற்கு அரிய ; **அம் கலவா விடம் மாந்தி** - அழகு பொருந்தாத நஞ்சையுண்டு; **அ வானவரும் மாந்தரும்** - அந்தத் தேவரும் மானுடரும்; **அலர் இட்டு ஏத்த** - மலர்களை இட்டு அருச்சித்துத் துதிக்கும்படி; **அங்கு வாழ் கம்ப வாணன்** - (காஞ்சீபுரமாகிய) அவ்விடத்தே வீற்றிருக்கின்ற திருவேகம்பவாணரும்; **ஒற்றை மாந்தரு** - ஒன்றான (அம்) மாமரத்தடியை ; **மங்கலவைப்பு ஆ கொண்டான்** - இன்பத்தானமாகக் கொண்டருளிய வருமாகிய சிவபிரானது; **அடி வாழ்த்துபு விம் மாம்** -

பாதங்களைப் புகழ்ந்து மகிழமாட்டேம்; **தருமம் கலம் ஆக கொள்ளாம்** - சிவபுண்ணியங்களை ஆபரணமாகக் கைக்கொள்ளமாட்டேம்; **வம்பில் மாழ்குதும்** - வீணாக மயங்குகின்றேம் என்றவாறு.

**குறிப்பு :** மாந்தல் - அருந்தல். விம்முதல் - மகிழ்தல். கலம் - ஆபரணம். மாழ்குதல் - மயங்குதல்.

**76. மாவலி யேவலை யாப்பகை**
**மீன்களை மாட்டிமண்மேன்**
**மாவலி யேவலை மாற்றினன்**
**றாழ்கம்ப மஞ்சுளரோ**
**மாவலி யேவலை நோக்கிபங்**
**காமகன் பெண்ணெனுநா**
**மாவலி யேவலை யேகொடி**
**யேன்வினை மாய்த்திடவே.**

பதப்பொருள் : ***மா வலியே வலை ஆ*** - மிகுந்த பலத்தையே கண்ணியாகக் கொண்டு; **பகை மீன்களை மாட்டி** - பகைவராகிய மச்சங்களை அகப்படுத்தி (வென்று); **மண் மேல் மாவலி ஏவலை மாற்றினன்** - இப்பூமிக்கண்ணே மகாபலிச் சக்கரவர்த்தியின் ஆணையைக் கெடுத்த விஷ்ணுமூர்த்தி; **தாழ் கம்ப** - வணங்குகின்ற திருவேகம்பநாதரே ; **மஞ்சு உள ரோம ஆவலி** - அழகிய மயிரொழுங்கினையும்; **ஏ அலை நோக்கி பங்கா** - அம்பினை வருத்துகின்ற கண்களையும் உடைய உமா தேவியாரை (வாம) பாகத்தில் உடையவரே ; **கொடியேன் வினைமாய்த்திட வலை** - (நீரே) கொடியேனுடைய கன்மங்களைப் போக்கியருளவல்லீர் என்றவாறு.

**குறிப்பு :** மஞ்சு - அழகு. உரோமாவலி - மயிரொழுங்கு. வலை - வல்லை.

77. வேதனை வாய்ப்பணி வுற்றவ
மேமெலி வேனுமுற
வேதனை வாய்ப்பணி யார்கம்பத்
தேவெளி நின்றுவிண்டு
வேதனை வாய்ப்பணி செய்துமெட்
டாதெங்கு மேவுசம
வேதனை வாய்ப்பணி யான்றடுத்
தாண்டனன் மேதகவே.

பதப்பொருள் : **வேதனைவாய் பணிவு உற்று** - துக்கத்தின் மூழ்கி; **அவமே மெலிவேனும் உற ஏ** - வாளா (மனம்) தளர்கின்ற அடியேனும் (திருவருள்) பெறும் வண்ணம்; **தனை வாய்ப்ப அணியார்** - தம் திருவடியை நேர்பட அணுகிய பரிபக்குவர்; (சூழப்பெற்ற காஞ்சீபுரத்துள்ள) **கம்பத்தே வெளிநின்று** - திருவேகம்பத்திலே வெளிப்பட்டுநின்று; **விண்டு வேதன்** - விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவரும்; **நைவு ஆய் பணி செய்தும் எட்டாது** - (மனம்) உருகித் தொண்டு செய்யப்பெற்றும் நேர்படாது; **எங்கும் மேவு சமவேதன்** - எவ்விடத்தும் நிறைந்த சமவேதசத்தியை உடையவரும்; **ஐ வாய் பணியான்** - பஞ்ச சிரசுகளைப் பொருந்திய சர்ப்பா பரணரும் ஆகிய திருவேகம்பநாதர்; **தடுத்து மேதக ஆண்டனன்** - (விடயத்திற் செல்லவொட்டாது) மீட்டு மாட்சிமைபெற அடிமை கொண்டருளினர் என்றவாறு.

திருவேகம்பநாதர் அடியேனும் திருவருள் பெறும் வண்ணம் வெளிப்பட்டுநின்று அடிமை கொண்டருளினர் எனக் கூட்டுக. இரண்டாமடியில் ஏ : அசை. சமவேதம் - விட்டு நீங்காமை.

**குறிப்பு :** வேதனை - துக்கம். நைவு - உருக்கம். பணி - பாம்பு.

8

78. தகரங்கந் திக்குங் குழலா
யினியுயிர் தாங்கெனுஞ்சொற்
றகரங்கந் திக்கு மருள்வா
ரலர்தப னன்றனைச்சேந்
தகரங்கந் திக்கு முகனைக்கொய்
கம்பர் தடவரைப்போ
தகரங்கந் திக்கு மரம்போற்
கொல்யானைத் தனிமன்னரே.

பதப்பொருள் : **தகரம் கந்திக்கும் குழலாய்** - மயிர்ச் சாந்தது கமழ்கின்ற அளகத்தையுடைய மாதே ; **அங்கு அந்திக்கும் அருள்வார் அலர்** - அவ்விடத்தினின்றும் (வந்து) மாலைக்காலத்தினும் கருணை செய்வாரல்லர்; (ஆதலால்) **இனி உயிர் தாங்கு எனும் சொல் தகர்** - இனி ஆவியைப் பாதுகாப்பாயாக என்று (நீ) கூறும் கூற்றை விட்டொழி; **தபனன் தனை சேந்த கரம்** - அக்கினிதேவனைச் சிவந்த கையையும், **திக்கு முகனை கம்கொய் கம்பர்** - நான்முகக் கடவுளைச் சிரத்தையும் அறுத்தருளிய திருவேகம்பநாதரது; **தட வரை போதகர்** - பெரிய மலையிடத்து வசித்துப் பிறர்க்கு உணர்த்துதலின் வல்லராகிய ; **அம் பந்து இக்கு மரம் போல் கொல்** - அழகிய கட்டுத்தறியைக் கரும்பு போலக் கொல்கின்ற ; **யானை தனி மன்னர்** - யானைகளையுடைய ஒப்பற்ற தலைவரானவர் என்றவாறு.

மாதே தலைவரானவர் கருணை செய்வாரல்லர்; ஆதலால் நீ கூறும் கூற்றை விட்டொழி எனக் கூட்டுக. இரண்டாம் அடியில் அந்திக்கும் : வேற்றுமை மயக்கம்.

மாலையம் பொழுது கண்டிரங்கல்.

**குறிப்பு :** தகரம் - மயிர்ச்சாந்து. அந்தி - மாலைப்போது. தபனன் - அக்கினி; அக்கினி கையை அறுத்தது தக்கனது வேள்வியில். போதகர் - உணர்த்தவல்லார்.

79. தனித்தன மேயன்பர்க் காகிநின்
றோன்றமிழ்க் கச்சிக்கம்பத்
தனித்தன மேயன்ப ராசத்தி
பூசனை கொண்டபுனி
தனித்தன மேய பசப்பொழி
யான்மற்றொர் சார்புமில்லேந்
தனித்தன மேயன மேயினி
யேதுய்யத் தக்கதுவே.

பதப்பொருள் : **அன்பர்க்கு தனி தனமே ஆகி நின்றோன்** - பத்தர்களுக்கு ஒப்பற்ற நிதியமேயாய் நின்றவரும்; **தமிழ் கச்சி கம்பத்தன்** - தமிழையுடைய காஞ்சீநகரத்துள்ள திருவேகம்ப நாதரும்; **நித்தன்** - என்றும் உள்ளவரும்; **அமேயன்** - பிரமாணாதீதரும்; **பராசத்தி பூசன கொண்ட புனிதன்** - காமாட்சியம்மையுடைய ஆராதனையை ஏற்றருளிய சுத்தருமாகிய சிவபிரான்; **இ தனம் மேய பசப்பு ஒழியான்** - இந்த முலைகளிலே தங்கிய பசலையைப் போக்கியருளார்; **மற்று ஓர் சார்பும் இல்லேம் தனித்தனம் ஏ** - (ஆதலால்) பிறிதொரு பற்றுக்கோடும் இல்லாதவர்களாய்த் தனிமையானாம் அன்றே ; **அனமே இனி உய்யத்தக்கது ஏது** - அன்னம் போலும் நடையினையுடைய பெண்ணே! மேற்பிழைக்கும் வண்ணம் யாதோ? என்றவாறு.

பாங்கி நீ கூறுவாயாக என்பது எஞ்சிநின்றது.

தலைவன் நீட்டத் தலைவி வருந்தல்.

**குறிப்பு :** தனம் - நிதி. அமேயன் = அப்பிரமேயன் - பிரமாண அதீதன் : பிரமாணம் - அளவு. பிரமேயம் - அளவையான் அளக்கப்படுவது. பசப்பு - பசலை, தேமல்.

80. வேதா கமங்கலை கற்றத
னான்முத்தி வேட்பதறி

**வேதா கமங்கலை நீர்போக்கு**
**மேவியன் பத்திவிளை**
**வேதா கமங்கலை மாமதி**
**வேய்ந்தவெண் ணீற்றொளிச்சு**
**வேதா கமங்கலை யாத்திசை**
**கொண்டமெய் யேகம்பனே.**

பதப்பொருள் : **வேதாகமம் கலை கற்றதனால்** - *(அநுபவ ஞானத்தால் அன்றி) வேதாகமங்களைப் படித்ததனால்;* **முத்தி வேட்பது அறிவே** - *மோட்சத்தை (அடைய) விரும்புதல் விவேகம் ஆமா ;* **தாகம் அங்கு அலை நீர் போக்குமே** - *தாகத்தை (நறுநீரேயன்றி) அவ்விடத்துள்ள உவரிநீர் ஒழிக்குமா?;* **வியன் பத்தி விளைவே தா** - *(ஆதலால்) பரபத்தியையும் (அதன்) முதிர்ச்சியாகிய பரஞானத்தையுமே தந்தருளும்;* **கம் அம் கலை மா மதிவேய்ந்த வெள் நீறு ஒளி சுவேதா** - *சிரத்தையும் கங்கையையும் கலையும் பெருமையும் பொருந்திய பிறையையும் அணிந்த வெண்மையாகிய விபூதிப் பிரகாசத்தையுடைய தவளவண்ணரே ;* **திசை கமம் கலை ஆ கொண்ட மெய் ஏகம்பனே** - *திக்குகளை நிறைந்த ஆடையாகப் புனைந்தருளிய தத்துவப் பொருளாயுள்ள திருவேகம்பநாதரே என்றவாறு.*

திருவேகம்பநாதரே தந்தருளும் எனக்கூட்டுக.

**குறிப்பு :** *சுவேதர் - தவளவண்ணர். கமம் - நிறைவு. கலை - ஆடை. மெய் - த்ததுவப்பொருள். விளைவு - முதிர்ச்சி.*

**81. ஏகம்பத் தானை யரித்திசை**
**யூர்புக ழேறுகச்சி**
**யேகம்பத் தானை யுரிபோர்வை**
**வாழிடஞ் சூதமதா**

மேகம்பத் தானை யுகைத்தடி
யார்க்கெளி வந்தருளு
மேகம்பத் தானை யரிக்கண்ணி
பாகனுக் கென்பர்களே.

**பதப்பொருள் :** ***ஏகு அம்பு அ தானை அரி திசை*** - (பகைவர்மேல்) செல்லும் பாணமும் அந்த வஸ்திரமும் விஷ்ணுமூர்த்தியும் திக்குகளுமே ; **ஊர் புகழ் ஏற கச்சியே** - நகரம் கீர்த்தி மிகுந்த காஞ்சீபுரமே ; **போர்வை கம்பத்து ஆனை உரி** - மேற்போர்வை தறியிற் கட்டப்படும் யானையினது தோலே ; **வாழ் இடம் சூதம் அது ஆம் ஏகம்பத்து** - வீற்றிருக்கும் தானம் மாமரத்தடியிலுள்ள திருவேகம்பத்ததாகிய தலமே ; **ஆனை உகைத்து** - இடபத்தை நடாத்தி; **அடியார்க்கு எளிவந்து** - அன்பர்களுக்கு எளிதிற் போந்து; **ஏகம் பத்தான் அருளும்** - ஒன்றாகிய ஞானத்தைத் தசகாரியத்தால் உபதேசித்தருளுகின்ற ; **ஐ அரி கண்ணி பாகனுக்கு என்பர்கள் ஏ** - அழகிய வரி பொருந்திய கண்களையுடைய உமாதேவியாரை வாமபாகத்திலிருத்திய சிவபெருமானுக் கென்று (பெரியோர்) சொல்லுவர் என்றவாறு.

இறுதியடியில் ஏகம்பத்தான் அருளும் என்பதற்கு ஈண்டுக் கூறிய பொருளே பொருள் என்பது : "ஞான பாதத்தை ஈரைந்தா நண்ணுகா ரியத்தால் எனக்குப தேச நல்கும்" என ஆன்றோர் கூறிய திருவாக்கான் உணர்க.

**குறிப்பு :** தானை - ஆடை. உரி - தோல். சூதம் - மாமரம். தசகாரியம். "ஞானபாத ...... நல்கும்" என்பது உலகுடைய நாயனார் கழிநெடிலாசிரிய விருத்தம் இரண்டாம் செய்யுள். தசகாரியமாவன : தத்துவரூபம், தத்துவ தரிசனம். தத்துவசுத்தி : ஆன்மரூபம், ஆன்மதரிசனம். ஆன்மசுத்தி : சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பன.

இதன் விவரத்தைத் தசகாரியம் என்னும் பண்டார சாத்திரத்தினுட் காண்க.

**82. பரம்பர மானந் தவாதவர்**
**சூழ்கம்ப னேயிம்பரும்**
**பரம்பர மானந் தமாநிறைந்**
**தோய்பசுஞ் சாபக்கரும்**
**பரம்பர மானந்த மொத்தகண்**
**ணார்திறம் பாறவெங்கும்**
**பரம்பர மானந்த முத்திதந்**
**தாண்டருள் பாலிப்பையே.**

**பதப்பொருள் :** ***பரம்பர*** - 'முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளே'; ***மானம் தவாதவர் சூழ் கம்பனே*** - மாட்சிமை நீங்காத மகத்துக்கள் சூழ்கின்ற திருவேகம்பநாதரே ; ***இம்பர் உம்பர் அம் பரமானந்தமா நிறைந்தோய்*** - கீழினும் மேலினும் அழகிய பரமசுகவடிவாக வியாபித்தவரே ; ***பசும் சாபம் கரும்பர்*** - பசிய வில்லாகிய கரும்பையுடைய மன்மதனாரும்; ***அம்பு அரம் மான் ஒத்த*** - பாணத்தையும் அரத்தையும் மானோக்கத்தையும் போன்ற ; ***அந்தக் கண்ணார் திறம் பாற*** - அழகிய கண்களையுடைய பெண்களுமாகிய (இருதிறத்தாரும் செய்கின்ற மயக்க) வலிமை கெடவும்; ***எங்கும் பரம்பு அர*** - எவ்விடத்தும் நிறைந்த (ஆன்மாக்களது பாசத்தை) அரிக்கின்றவரே ; ***மால் நந்த முத்தி தந்து*** - (ஆணவமல) மயக்கம் கெடவும் வீடுபேற்றை உதவி; ***ஆண்டு அருள் பாலிப்பை*** - (அடியேனை) அடிமைகொண்டு கருணைபுரிவீராக என்றவாறு.

வியாபித்தவரே என்பதன் பின்னர் அரிக்கின்றவரே எனக் கூறிக் கொள்க.

**குறிப்பு :** பரமானந்தம் - பரம சுக வடிவம் : அஃதாவது அதீத நிலைக்கண்ணதாகிய சிவத்துவ விளக்கம்.

83. பாலனஞ் செய்துத வார்கொன்றை
மாலைதண் பாசடைமேற்
பாலனஞ் செய்துறு தென்கச்சி
யேகம்பர் பானுவுமேற்
பாலனஞ் செய்துதல் போலெய்து
மாலையின் பைந்துளவோன்
பாலனஞ் செய்துகொல் வானென்றென்
றேங்குமென் பான்மொழியே.

**பதப்பொருள் : பாலனம் செய்து கொன்றை மாலை உதவார்** - காத்தற்றொழில் புரிந்து கொன்றை மாலையைத் தந்தருளார்; **தண் பாசடை மேல்** - குளிர்ந்த பசிய இலைகளின்மீது; **பால் அனம் செய்துறு** - வெண்ணிறத்தையுடைய அன்னங்கள் கழனிகள் தோறும் நெருங்குகின்ற; **தென் கச்சி ஏகம்பர்** - அழகிய காஞ்சி நகரத்தில் வாழும் திருவேகம்பநாதர்; (ஆதலால்) **பானுவும் மேற்பாலன்** - சூரியனும் மேற்குத் திக்கை அடைந்தான்; **நஞ்சு எய்துதல் போல் எய்தும் மாலையின்** - ஆலாகலம் வருதல் போன்று வாராநின்ற அந்திக் காலத்தே ; **பை துளவோன் பாலன்** - பசிய துளசி மாலையை அணிந்த விஷ்ணுமூர்த்தியின் புதல்வனாகிய மன்மதன்; **அஞ்சு எய்து கொல்வான் என்று என்று**- பஞ்சபாணங்களையும் பிரயோகித்துக் கொல்வானென்று பல முறை ; **என் பால் மொழி ஏங்கும்** - பாலின் இரதம் போலும் வசனத்தையுடைய எனது புதல்வி பரிவுற்றுக் கூறுவள் என்றவாறு.

திருவேகம்பநாதர் கொன்றைமாலையைத் தந்தருளார், ஆதலால் எனது புதல்வி பரிவுற்றுக் கூறுவள் எனக் கூட்டுக.

நற்றாயிரங்கல்.

**குறிப்பு :** பாலனம் - காத்தல் தொழில். பால் அனம் - பால் நிறத்தையுடைய அன்னப்பறவைகள். பானு - சூரியன். பால் - பக்கம். மாலை - அந்திக்காலம். பாலின் இரதம் - பாலின்கட்சுவை.

**84.** **பாதக மஞ்சன வெற்பாக**
**வீட்டுநற் பண்புவிரும்**
**பாதக மஞ்சன மாட்டாது**
**கைபன்னு நாப்புகழ்செப்**
**பாதக மஞ்சன கண்டாகம்**
**பாபன்றி நாடரிய**
**பாதக மஞ்சன மின்னமுங்**
**காணரும் பண்ணவனே.**

**பதப்பொருள் : அகம்** - நெஞ்சமானது; **பாதகம் அஞ்சன வெற்பாக ஈட்டும்** - பாவங்களைக் கரிய மாலைபோல (மேலும் மேலும்) ஆர்ச்சிப்பதேயன்றி; **நல் பண்பு விரும்பாது** - சன்மார்க்கங்களைச் (சிறிதும்) சிந்தியாது; **கை மஞ்சனம் ஆட்டாது** - கரமானது (உமது திருவடிகளிலே) திவ்வியோதகத்தை அபிஷேகம் செய்யாது; **பன்னு நா** - வசனிக்கும் நாக்கானது; **புகழ் தக செப்பா** - (உமது) கீர்த்திகளை மாட்சிமைபெறச் சொல்லாது; **மஞ்சு அன கண்டா** - (ஆதலால்) மேகம்போன்ற (கரிய) கழுத்தையுடையவரே ; **கம்பா** - திருவேகம்பநாதரே ; **பன்றி நாட அரிய பாத** - பன்றிவடிவமான விஷ்ணுமூர்த்தி தேடுதற்கரிய பாதங்களையுடையவரே ; **அனம்** - அன்னவடிவமான பிரமதேவர்; **கம் அஞ்சு இன்னமும் காணரும் பண்ணவனே** - திருமுடிகள் ஐந்தனையும் இன்னும் அறிதற்கரிய மகாதேவரே என்றவாறு.

பாபத்தை உவர்ப்பித்துச் சிவபுண்ணியத்தை உருசிப்பித்தருளும் என்பது எஞ்சிநின்றது. செப்பாது என்பது செப்பா எனத் துவ்வீறு தொக்குநின்றது.

**குறிப்பு:** அகம் - நெஞ்சம். அஞ்சனவெற்பு - கரிய மலை. ஆர்ச்சிப்பது - ஈட்டுவது. மஞ்சனம் - அபிஷேகம். திவ்விய உதகம் - புனிதநீர். மஞ்சு - மேகம். கம் அஞ்சு : கம் - திருமுடி. நெஞ்சு, கரம், நா இவை சிவபெருமான் விஷயமாகவே தொண்டாற்றிச் சிவ புண்ணியத்தை ஈட்ட வேண்டும் என்க. இதனை, "மனமது நினைய வாக்கு வழுத்த மந்திரங்கள் சொல்ல, இனமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றி" (சித்தி-114) என்பதால் அறிக.

85. வனப்புண் டரிக முகத்தார்த
முற்பல மாமலரின்
வனப்புண் டரிகவர் கண்விரும்
பேல்வணங் காயுரைசெய்
வனப்புண் டரிகல வாமல
ருண்டுவண் கம்பமுண்டு
வனப்புண் டரிகவுரி யானுண்
டேமனம் வாய்கையுண்டே.

பதப்பொருள் : **வனம் புண்டரிக முகத்தார்தம்** - நீர்நிலையினுள்ள தாமரைமலர் போன்ற முகத்தை உடைய பெண்களது; **மா உற்பல மலரின் வனப்பு உண்டு** - அழகிய குவளைமலரின் அழகைக் கவர்ந்து; **அரி கவர் கண் விரும்பேல்** - வரிகளை அவாவிய கண்களை இச்சியாதே; **வணங்காய்** - (மாணாக்கனே! கடைப்பிடித்து) வழிபடுவாயாக ; **உரைசெய்வன்** - சொல்லுவேன்; **அப்பு உண்டு** - (பூஜோபகரணமாகத் தடாகத்திலே) ஜலமும் உள்ளது; **அரி கலவா மலர் உண்டு - (வனத்திலே)**

**வண்டுகள் அணுகாத அலரும் உள்ளது; வண்** கம்பம் **உண்டு** - மாட்சிமைபெற்ற (ஆலயமாகத்) **திருவேகம்பமும் உள்ளது; வனம் புண்டரிக உரியான் உண்டு** - காட்டில் வாழும் புலித்தோலையுடைய சிவபிரானும் (ஆராதனையை ஏற்றுப் பயன் கொடுக்கும் படி சிவலிங்கமூர்த்தம் கொண்டருளி அத்திருவேகம்பத் தில்) வீற்றிருக்கின்றனர்; **மனம் வாய் கை உண்டு** - (சற்பாவனை செய்யும் கருவியாக) நெஞ்சமும் (ஸ்ரீ பஞ்சாக்கரத்தை உச்சரிக்கும் கருவியாக) வாக்கும் (பூஜிக்கும் கருவியாகக்) கரமும் உள்ளன என்றவாறு.

ஆதலால் புதிதாக அமைய வேண்டுவது ஒன்றும் இன்று என்பது எஞ்சி நின்றது. எளிதில் செயற்பாலதாகிய இவ்வழிபாடே புத்தி முத்தி சாதனம் என்பது கருத்து.

**குறிப்பு :** வனம் - நீர். புண்டரிகம் - தாமரை. உற்பலம் - நீலமலர். வனப்பு - அழகு. வரி - கருவரி செவ்வரிகள். அப்பு - நீர். அரி - வண்டு. வனப் புண்டரிகம் - காட்டிலுள்ள புலி.

**86. கைத்தா யினையகன் றாயமும்**
**யானுங் கவலமறு**
**கைத்தா யினைய வருகாலன்**
**போலுமோர் கண்டகன்றன்**
**கைத்தா யினையவென் கண்மணி**
**யேகக் கடவியெனைக்**
**கைத்தா யினையநற் கம்பந்**
**தொழாரிற் கடுந்தெய்வமே.**

பதப்பொருள் : **கைத்தாயினை அகன்று** - செவிலித்தாயையும் நீங்கி; **ஆயமும் யானும் கவல** - பெண்கள் கூட்டமும் நானும் வருந்தும் வண்ணம்; **மறுகை தாய்** - வீதியைக் கடந்து; **இல் நைய வர காலன் போலும்** - வீட்டிலுள்ளார் துன்புறுமாறு (உயிரைக் கவர) வருகின்ற

இயமன் போன்ற ; **ஓர் கண்டகன் தன் கைத்து ஆய்** - ஒரு கொடியோன் வயத்ததாகி; **இனைய என் கண்மணி ஏக கடவி** - இப்பெற்றித்தாய என்னிரு கண்ணினுண்மணி (போன்ற பெண்மணி) செல்லும் வண்ணம் நடாத்தி; **எனை கைத்தாய்** - என்னை உவர்ப் பித்தாய்; **கடும் தெய்வமே** - (ஆதலால்) கொடிய விதியே ; **நல் கம்பம் தொழாரின்** - நல்ல திருவேகம்பத்தை வழிபடாதவரைப்போல்; **இனைய** - (நீ) துன்பப் படுவாயாக என்றவாறு.

இரண்டாமடியில் இல் : ஆகுபெயர்.

விதியொடு வெறுத்தல்.

**குறிப்பு :** கைத்தாய் - செவிலித்தாய். மறுகு - வீதி. கவல - வருந்துமாறு. நைய - துன்பப்பட. கண்டகன் - கொடியோன். கைத்து ஆய் : கைத்து - கையிலுள்ளது : அகப்பட்டு என்க. கைத்தல் - உவர்ப்பித்தல்.

**87. கடமாதங் கம்பப் பிரானைச்**
**சிவநிசிக் கண்வணங்கிற்**
**கடமாதங் கம்பற் பலசூழ**
**வாழ்ந்தங்குக் கஞ்சர்கண்ணார்**
**கடமாதங் கம்பணி யாப்பூண்டு**
**வைகிப்பின் கார்மலச்சங்**
**கடமாதங் கம்பற் றறப்போய்க்**
**கலப்பர் திருவடியே.**

**பதப்பொருள் : கட மாதம் சிவநிசிக்கண்** - மாசி மாசத்திலே சிவராத்திரி காலத்திலே ; **கம்பப் பிரானை வணங்கில்** - திருவேகம்பநாதரைத் தொழுதால்; **கட மாதங்கம்** - (இகலோகத்திலே) மதத்தையுடைய யானைகள்; **பல சூழ வாழ்ந்து** - பலபல (தமது முன்றிலில்) சூழும் வண்ணம் வாழ்ந்திருந்து; **அங்கு கஞ்சர் கண்ணர்கள் தமாது** - பரலோகத்திலே பிரம

விஷ்ணுக்களுடைய ; **அங்கம் பணி ஆ பூண்டு வைகி** - என்புகளை ஆபரணமாகத்தரித்துச் (சிவ சாரூப்பியராய் மகாசங்காரங்காறும்) இருந்து; **பின் கார் மல சங்கடம்** - பின்னர்க்கரிய ஆணவமலத்தானாய துன்பமாகிய ; **ஆதங்கம் பற்று அற போய்** - பொல்லாங்குத் தொடர்பு முழுதும் ஒழிந்து; **திருவடியே கலப்பர்** - திருவடிக்கண்ணே (இரண்டறக்) கலப்பர் என்றவாறு.

**குறிப்பு :** கடமாதம் - கும்பமாதம் : மாசி. சிவநிசி - சிவராத்திரி. கடம் - மத நீர். மாதங்கம் - யானை. அங்கம் - என்பு. பணி - ஆப்ரணம். மலம் - ஆணவமலம். சங்கடம் - துன்பம். ஆதங்கம் - பொல்லாங்கு.

88. திருக்கோவை யாரண னைப்படைத்
தேகம்பத் தேமகிழ்வோய்
திருக்கோவை யாருளத் தோரன்பர்
கூறிடச்சிற்றம்பலத்
திருக்கோவை யார்கரத் தால்வரைந்
தாண்டசெல் வாவருள்கூ
திருக்கோவை யார்படை வேட்கோவின்
றாற்றுமென் சேல்விழியே.

பதப்பொருள் : **திரு கோவை** - இலக்குமிக்கு நாயகனாகிய விஷ்ணுமூர்த்தியையும், **ஆரணனை படைத்து** - பிரம தேவனையும் (உலகத்தின் தோற்ற நிலைகளின் பொருட்டுத் தம்மினின்றும்) தோற்றுவித்து; **ஏகம்பத்தே மகிழ்வோய்** - திருவேகம்பத்தில் களிகூர்ந்து வாழ்பவரே ; **உளத்து திருக்கு ஒ வையார்** - மனத்தின்கண்ணே குற்றம் சிறிதும் பற்றாதாரும், **ஓர் அன்பர் கூறிட** - ஒப்பற்ற அடியாரும் ஆகிய மாணிக்கவாசக சுவாமிகள் சொல்ல ; **திருச்சிற்றம்பலக் கோவையார் கரத்தால் வரைந்து** - (திருவாசகத்தோடு)

திருச்சிற்றம்பலக் கோவையாரையும் திருக்கரத்தினால் எழுதி; **ஆண்ட செல்வா** - அடிமைகொண்டருளிய சீரியரே ; **கூதிருக்கோ** - குளிர்காற்றுக்கா ; **வை ஆர் படை வேட்கோ** - (அன்றிக்) கூர்மை பொருந்திய பாணங்களையுடைய மன்மதனுக்கா ; **இன்று என் சேல்விழி ஆற்றும்** - இப்போழ்து என மீன்போலும் நோக்கினையுடைய மடமகள் சகிப்பள்; **அருள்** - (ஆதலால்) கருணை செய்தருளும் என்றவாறு.

இரண்டாமடியில் ஓகாரம் ஒழியிசை.

நற்றாயிரங்கல்.

**குறிப்பு :** திரு - இலக்குமி. கோ - தலைவன் : எனவே திருமால் என்க. ஆரணன் - வேதன் : பிரமதேவர் உலகங்களைப் படைத்தற்பொருட்டும். திருமால் அவ்வுலகங்களைக் காத்தற்பொருட்டும் இறைவர் தம்மிடத்தினின்றும் தோற்றுவித்தருளினர் என்பது வரலாறு. திருக்கு - குற்றம், மாறுபாடு. வையார் - வையாதவர். ஓர் அன்பர் : ஓர் - ஒப்பற்ற. சிற்றம்பலத் திருக்கோவையார் : திருச்சிற்றம்பலக் கோவையார் என மாறுக. ஆண்ட - ஆட்கொண்ட. கூதிர் - குளிர்காற்று ; குளிர்காலம். வை - கூர்மை. வேள் - மன்மதன். சேல் - ஒருவகைமீன்; "சேலுலாம்வயல்" (திருவிசைப்பா). "சேலும் கயலும் திளைக்கும் கண்ணார்" (திருப்பல்லாண்டு).

89. விழுமந் தவாதவர் சார்பே
நயந்து விவேகங்கள
விழுமந் தவாதவ வேனோர்
மதங்களை மேற்கொண்டங்கண்
விழுமந் தவாதவ மென்றுமை
காட்டி விளக்கினைநல்
விழுமந் தவாதவர் வெற்பாகம்
பாவென் விளம்புவனே.

**பதப்பொருள் : விழுமம் தவாதவர் சார்பே நயந்து** - (பெத்த) துக்கம் கெடாதவருடைய நண்பையே மகிழ்ந்து (கொண்டாடி); **விவேகங்கள் அவிழும் மந்த** - அறிவுகள் பறிபோய அபக்குவனே; **ஆ தவ ஏனோர் மதங்களை மேற்கொண்டு** - பெரும்பான்மையும் வேதபாகிய ரானோர் சமயங்களை வெல்லுதலிலே தலைப்பட்டு; **அங்கண் விழும் அந்த வாது** - அதன்கண்ணே கருத்தழுந்திச செய்யும் அத்தருக்கமானது; **அவம் என்று மை காட்டி** - பயனற்ற தென்று (அப்பரபக்கத்தின்) குற்றத்தைப் புலப்படுத்தி (மலைவு தீர்த்து); **நல் விழுமம் விளக்கினை** - (சுபக்கமாகிய சித்தாந்த சைவத்தின்) ஞானபாதச் சிறப்புப் பொருளை உபதேசித்தருளினீர்; **தவா தவர் வெற்பா** - (ஆதலால்) நாயகரே மேருமலையாகிய வில்லையுடையவரே ; **கம்பா என் விளம்புவன்** - திருவேகம்பநாதரே (உமது கருணையைப் பற்றி) அடியேன் யாது புகழ்ந்து கூறுவேன் என்றவாறு.

**குறிப்பு :** விழுமம் - துன்பம். தவா - நீங்காத. சார்பு - பற்றுக்கோடு. நயந்து - விரும்பி. விவேகம் - அறிவு. அவிழும் - பறிபோகும். மந்தன் - அபக்குவன். தவ - மிக. வாது - தருக்கம். அவம் - வீண். நல் விழுமம் - நல்ல மேம்பாடு. தவர் - வில். வெற்பு - மலை: மேருமலை.

90. புவனம் பவனங்க மண்ணழ
லாவன்புள் ளூர்களர்காம்
புவனம் பவனங்க ளாமவர்
வோன்வினை பொய்மலந்த
புவனம் பவனங்க ணன்கம்ப
னென்றென்று போற்றிவிரும்
புவனம் பவனங்க னத்தனென்
றேகொண்ட போதனையே.

**பதப்பொருள் : மண் புவனம் அழல் பவனம் கம் ஆவன்** - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் (ஆகிய பஞ்ச பூதமும்) ஆகின்றவர்; **புள்ளூர் களர் காம்பு வனம்** - புள்ளிருக்குவேளூர் திருக்களர் திருநெல்வேலி ஆகிய தலங்களை ; **பவனங்களா அமர்வோன்** - ஆலயங்களாகக் கொண்டு வீற்றிருப்பவர்; **வினை பொய் மலம் தபுவன்** - (பக்குவான் மாக்கட்குக்) கன்மமும் மாயையும் ஆணவமும் ஆகிய (மும்மலங்களையும்) கெடுத்தருள்பவர்; **அம் பவன்** - அழகிய விச்சுவகாரணர்; **அம் கணன்** - அருட்கண்ணர்; **கம்பன்** - திருவேகம்பநாதர்; **என்று என்று போற்றி விரும்புவன்** - என்று பல முறை (அடியேன்) துதித்துச் சிந்திப்பன்; **அம்பு அவ் அனங்கன் அத்தன் என்று** - பாணமானது அந்த மன்மதன் பிதாவாகிய விஷ்ணுமூர்த்தி ஆகக் கொண்டருளிய ; **போதனை** - ஞானமூர்த்தியை என்றவாறு.

ஞானமூர்த்தியைத் துதித்துச் சிந்திப்பன் எனக் கூட்டுக. மாயையாகிய காரணத்தை அதன் காரியமாகிய தனுவாதிமேல் வைத்துப் பொய் என உபசரித்தார்.

என்றே என்பதில் ஏகாரம் அசை.

**குறிப்பு :** புவனம் - நீர். பவனம் - காற்று. கம் - ஆகாயம். காம்பு - மூங்கில் : திருநெல்வேலியில் தல விருட்சம். பவனங்கள் - ஆலயங்கள். தபுத்தல் - கெடுத்தல். பவன் - விசுவகாரணர் : பவம் - பிறப்பு. விச்சுவாதிகன் - உலகத்திற்கு அப்பாற்பட்டவன்.

91. **போதுமி னையம்ப ரேநட**
**வாதிங்கும் பூம்புகழிப்**
**போதுமி னையம்ப ரத்தைப்**
**பொருமிடை யார்வசையும்**
**போதுமி னையம் பரிகம்பர்**
**தார்புரிந் தாரினியோர்**

**போதுமி னையம் பரவையின்**
**வீரமும் பொன்றுகவே.**

**பதப்பொருள் : ஐ அம்பரே** - பஞ்ச பாணங்களையுடைய மன்மதனாரே ; **உம் பூ பகழி போது** - உமது பொலிவு பெற்ற அம்புகளாகிய மலர்கள்; **இங்கு நடவாது போதுமின்** - ஈண்டுச் செல்லாது செல்வீராக ; **மினை அம்பரத்தை பொரும் இடையார்** - மின்னலையும் ஆகாசத்தையும் போன்ற இடையையுடைய பெண்கள்; **வசையும் போதும்** - அலர் தூற்றலும் அமையும்; **அரி இன் ஐ அம்பு** - விஷ்ணுமூர்த்தியை இனிய அழகிய பாணமாகக் கொண்ட ; **கம்பர் தார் புரிந்தார்** - திருவேகம்பநாதர் மாலை தந்தருளினார்; (ஆதலால்) **இனி ஓர் போதும் இனையம்** - இனி ஒருபொழுதும் வருந்தமாட்டேம்; **பரவையின் வீரமும் பொன்றுக** - கடலின் வலிமையும் மெலிந்தொழியக்கடவது என்றவாறு.

திருவேகம்பநாதர் மாலை தந்தருளினார், ஆதலால் மன்மதனாரே! செல்வீராக ; பெண்கள் அலர் தூற்றலும் அமையும்; இனி வருந்த மாட்டேம், கடலின் வலிமையும் ஒழியக்கடவது எனக்கூட்டுக.

மாலை விருப்புரைத்தல்.

**குறிப்பு :** பகழி - அம்பு. அம்பரம் - ஆகாயம். பொன்றுதல் - அழிந்தொழிதல்.

**92. கவலைக் கரும்பர வப்பூம்**
**பகழிக்கும் கன்னியர்நோக்**
**கவலைக் கரும்பர வேர் நகை**
**யல்குலுக் காசைகொண்டு**
**கவலைக் கரும்பர வைக்குள்**
**விழாது கருணைபெரு**

கவலைக் கரும்பர மானந்த
மீந்தனன் கம்பத்தனே.

பதப்பொருள் : **கவலை கரும்பர்** - (காம) நோயை (வளர்க்கும்) கருப்பு வில்லையுடைய மன்மதனாரது; **அவம் பூ பகழிக்கும்** - வறிதாகிய புட்ப பாணங்களுக்கும்; **கன்னியர் நோக்க வலைக்கு** - பெண்களது பார்வை வலைக்கும்; **அரும்பு அரவு ஏர் நகை அல்குலுக்கு** - (முல்லை) முகையும் பாம்பின் படமும் போன்ற தந்த (பந்திக்கும்) நிதம்பத்திற்கும்; **ஆசை கொண்டு** - மையல் பூண்டு; **கவலை கரும் பரவைக்குள் விழாது** - துக்கமாகிய கரிய கடலின் வீழ்ந்து மூழ்காவண்ணம்; **கம்பத்தன்** - திருவேகம்பவாணர்; **கருணை பெருக** - திருவருள் பெருக ; **அலைக்க அரும் பரமானந்தம் ஈந்தனன்** - அலைத்தல் கூடாத பரம சுகத்தை (அடியேற்குத்) தந்தருளினர் என்றவாறு.

இரண்டாம் அடியில் அரவு : ஆகுபெயர்.

**குறிப்பு** : கரும்பர் - கரும்புவில்லையுடைய மன்மதன். பூம்பகழி - மலரம்பு. நோக்கம் - பார்வை. கரும் பரவை - கரிய கடல். பரமானந்தம் - பரமசுகம் : சிவபோகம்.

93. கம்பாகம் பாநதிப் பாற்பூசை
செய்கவு ரிக்கருணோக்
கம்பாகம் பாலித்த கோவே
மகளிர் கடிதடநா
கம்பாகம் பாமொழி கண்களென்
னாதுன் கழலைமுறுக்
கம்பாகம் பாக முறுந்தமிழ்
பாடுங் கடன்பணியே.

பதப்பொருள் : **கம்பா** - திருவேகம்பநாதரே ; **கம்பா நதிப்பால்** - கம்பையாற்றின் கண்ணே ; **பூசை**

**செய்கவுரிக்கு** - (திருவடிகளைப்) பூசித்த உமாதேவியாருக்கு; **அருள் நோக்கம் பாகம் பாலித்த கோவே** - கருணைப் பார்வையும் (வாம) பாகமும் அளித்தருளிய முதல்வரே ; **மகளிர் கடி தடம் நாகம்** - பெண்களுடைய நிதம்பம் பாம்பின் படமாகும்; **மொழி கண்கள் பாகு அம்பு ஆம் என்னாது** - வசனங்களும் நேத்திரங்களும் பாகின் சுவையும் பாணங்களுமாகும் என்று புனைந்துரையாது; **உன் கழலை** - உமது திருவடிகளை ; **முறுக்கம் பாகம்** - (புகழ்ந்து நாளிகேர பாகமாகிய) முறுகிய பாகமும்; **பாகம் உறும் தமிழ்** - (கதலீபாகமாகிய) செம்பாகமும் பெற்ற தமிழ்ச் செய்யுட்கள்; **பாடும் கடன் பணி** - இயற்றுமுறைமையை (அடியேனுக்கு) அருள் செய்வீராக என்றவாறு.

இட்சுபாகம் திராக்ஷாபாகம் ஆகிய இரண்டையும் முதலினும் இறுதியினும் கூட்டி நான்கென வடநூலார் கூறுப. அவற்றுள் இடைநின்ற நாளிகேர பாகம் கதலீபாகம் ஆகிய இரண்டுமே பெரும் பயன் உடையன என்பார் 'முறுக்கம் பாகம் பாகமுறும் தமிழ் பாடும் கடன் பணி' என்றார். இட்சு - கரும்பு. திராட்சை - முந்திரிகை. நாளிகேரம் - தெங்கு. கதலி - வாழை.

**குறிப்பு :** கவுரி - உமாதேவியார். நோக்கமும் பாகமும் பாலித்த. பாடல்கள் நாளிகேரபாகம், கதலீபாகம், இட்சுபாகம், திராக்ஷாபாகம் என நால்வகைத்து.

**94. பணியா தனந்தும் பரிசடி**
**யாரெதிர்ப் பட்டிடிற்செய்**
**பணியா தனந்தன் புகழறிற்**
**பீரென்று பாடிப்புத்தி**

பணியா தனந்தந் துபசரி
யாதுகம் பாவரவப்
பணியா தனந்தஞ்ச மென்றழி
வேனெப் படியுய்வனே.

பதப்பொருள் : **அடியார் எதிர்ப்பட்டிடில்** - தொண்டர்கள் நேர்பட்டால்; **அனந்தம் பரிசு பணியாது** - பல முறை வணங்குதல் செய்யாதும்; **செய்பணி யாது** - (அடியேனால்) இயற்றத்தக்க குற்றேவல் யாது; **அனந்தன் புகழ நிற்பீர் என்று** - சேடனும் துதிக்க நிற்கும் மகான்களே என்று; **பாடி புத்தி பணி** - புகழ்ந்து (சிவமாக) மதித்து (வினவி), **ஆதனம் தந்து உபசரியாது** - ஆசனம் கொடுத்து வழி படாதும்; **கம்பா அரவப் பணியா** - திருவேகம்பநாதரே சர்ப்பாபரணரே ; **தனம் தஞ்சம் என்று** - திரவியத்தையே பற்றுக்கோடாகக் கொண்டு; **அழிவேன் எப்படி உய்வன்** - கெடுகின்ற அடியேன் எவ்வண்ணம் பிழைப்பேன் என்றவாறு.

மேலும் மேலும் பொய்ப்பொருளை ஈட்ட முயலாது கருத்தமைந்து இயன்ற மாத்திரம் சற்பாத்திரத்தில் உபகரித்தலே உய்யும் நெறி என்பது கருத்து.

**குறிப்பு :** அனந்தன் - ஆதிசேடன். தனம் - திரவியம். தஞ்சம் - பற்றுக்கோடு.

*திருவேகம்பரந்தாதி முற்றிற்று.*



## திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு

ஆனந்த மானந்தந் தோழி - கம்பர்
ஆடுந் திருவிளை யாட்டினைப் பார்க்கில்
ஆனந்த மானந்தந் தோழி.

ஒன்றுவிட் டொன்றுபற் றாமல் - என்றும்
ஒன்றுவிட் டொன்றினைப் பற்றவல் லாருக்
கொன்று மிரண்டுமல் லாமல் - நின்ற
ஒன்றனை வாசக மொன்றி லளிப்பார்
- ஆனந்த

இரண்டு வினையால் விளைந்த - வகை
இரண்டையும் காட்டியென் சென்னியின் மீதே
இரண்டு சரணமும் சூட்டி - அஞ்சில்
இரண்டை யிரண்டி லடக்கவல் லாராம்
- ஆனந்த

மூன்றுல கும்படைப் பாராம் - அந்த
மூன்றுல கும்முட னேதுடைப் பாராம்
மூன்றுகடவுளா வாராம் - அந்த
மூன்று கடவுளர் காணவொண் ணாராம்
- ஆனந்த

நாலு வருணம்வைப் பாராம் - பின்னும்
நால்வகை யாச்சிர மங்கள்வைப் பாராம்
நாலுபா தங்கள்வைப் பாராம் - அந்த
நாலுக்கு நாலுப தமும்வைப் பாராம்
- ஆனந்த

அஞ்சு மலமஞ் சவத்தை - பூதம்
அஞ்சுதன் மாத்திரை யஞ்சிந் திரியம்
அஞ்சு தொழிலஞ்சு மாற்றி - எழுத்
தஞ்சுமஞ் சாக வமைக்கவல் லாராம்
- ஆனந்த

ஆறாறு தத்துவக் கூட்டம் - உடன்
ஆறத்து வாக்களு மாதார மாறும்
ஆறுகுற் றங்களு நீங்க - இரண்
டாறின் முடிவின டனஞ்செய் வாராம்
- ஆனந்த

ஏழு புவனப் பரப்பும் - கடல்
ஏழுஞ் சிகரிக ளேழும் பெருந்தீ
வேழும் பிறவிக ளேழும் - இசை
ஏழும் படைத்த விறைவ ரிவராம்
- ஆனந்த

எட்டு வடிவுமா வாராம் - அந்த
எட்டு வடிவுக்கு மெட்டரி யாராம்
எட்டுக் குணமுடை யாராம் - பத்தி
எட்டு முடையோ ரிதயத்து ளாராம்
- ஆனந்த

ஒன்பது மொன்பது மொன்றும் - மற்றை
ஒன்பது முப்பது மொன்பது மொன்றும்
ஒன்பது மொன்பது மொன்றும் - பின்னும்
ஒன்பது மானவைக் கப்புறத் தாராம்
- ஆனந்த

பத்துத் திசையுடை யாராம் - பத்துப்
பத்துப் பத்தாந்திருப் பேருடை யாராம்
பத்துக் கரமுடை யாராம் - தவம்
பத்தினி லொன்றுபத் தாகச்செய் வாராம்
- ஆனந்த

ஞானமு ஞேயப் பொருளும் - பற்றும்
ஞாதாவு மில்லையென் பார்க்கரி யாராம்
ஞானமு ஞேயப் பொருளும் - பற்றும்
ஞாதாவு மாய்ப்பகுப் பார்க்குமெட் டாராம்
- ஆனந்த

மெய்யி லணிவதும் பாம்பு - மலை
வில்லினி னாணாய்வி சிப்பதும் பாம்பு
கையிற் பிடிப்பதும் பாம்பு - அவர்
காட்டின நாடகம் காண்பதும் பாம்பு
- ஆனந்த

நாதத் துடியி னடிப்பும் - மெல்ல
நடந்து நடந்து நடிக்கு நடிப்பும்
வேதம் படிக்கும் படிப்பும் - நுதல்
மீது விளங்கு குறுவேர்ப் பொடிப்பும்
- ஆனந்த

கையிற் கபாலத் தழகும் - திருக்
காலினிற் பாதுகை சேர்த்த வழகும்
மெய்யணி நீற்றி னழகும் - மையல்
மீறுங் குறுநகை மூர லழகும்
- ஆனந்த

உடுப்பது காவி யுடையாம் - மறை
ஓதிமந் தேடுஞ் சிரமேற் சடையாம்
எடுப்பது பிச்சை யமுதாம் - மார்பில்
ஏற்பது காமாட்சி கொங்கைச் சுவடாம்.
- ஆனந்த

*ஆனந்தக்களிப்பு முற்றிற்று.*



